بیوی کیلئے بیس سنہری اصول

# இல்லத்தரசிகளுக்கு

# 20 இருபது போதனைகள்...


حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی، مجددی
دامت برکاتہم

ஹழ்ரத் மௌலானா
பீர் துல்ஃபிகார் அஹ்மத் நக்ஷ்பந்தி
( தாமத் பரகாத்துஹும் )

தமிழில் :
மௌலவி S.ஷேக் அப்துல்லாஹ் யூஸுபி



வெளியீடு :
ஹாதி பப்ளிஷர்ஸ் – திண்டுக்கல்

# இல்லத்தரசிகளுக்கு இருபது போதனைகள்

# கணவனின் மனதை வெல்வது எப்படி?

ஹழ்ரத், மௌலானா

**பீர் துல்ஃபிகார் அஹ்மத் ஸாஹிப்** நக்ஷ்பந்தி (தாமத் பரகாதுஹும்)

தமிழில்

**எஸ். ஷேக் அப்துல்லாஹ்**

யூஸுஃபி.

-: வெளியீடு :-

**ஹாதி பப்ளிஷர்ஸ்,**

**திண்டுக்கல்**

**செல்: 98947 63618, 89253 18651**

# நூல் விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | இல்லத்தரசிகளுக்கு இருபது போதனைகள் |
| உருதூ | : | ஹஜ்ரத் மௌலானா துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் நக்ஷ்பந்தி தாமத் பரகாதுஹூம் |
| தமிழாக்கம் | : | மௌலவி ஷேக் அப்துல்லாஹ் யூஸுபி |
| வெளியீடு | : | ஹாதி பப்ளிஷர்ஸ், திண்டுக்கல் |
| போன் | : | 98947 63618, 89253 18651 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |
| முதற்பதிப்பு | : | ஜூன் 2014 / ஷஃபான் 1435 |
| விலை | : | ரூ 35/- |
| நூலாக்கம் | : | தி பிரிண்டிங்கு ஹவுஸ்<br>காஜாமலை, திருச்சிராப்பள்ளி - 23.<br>போன் : 0431 - 2420121<br>Email : tphtrichy@gmail.com |

திண்டுக்கல் தாருல்உலூம் யூஸுபிய்யா அரபிக்கல்லூரியின்
முதல்வரும், எனது ஆசிரியத் தந்தையுமான கண்ணியத்திற்குரிய
மௌலானா, மௌலவி, **முஹம்மது அலி அன்வாரி** ஹஜ்ரத்
அவர்கள் துஆவுடன் வழங்கிய

## மதிப்புரை

இஸ்லாமிய உலகின் மாபெரும் சீர்திருத்தப் பணியில் தன்னை
அர்ப்பணித்துக் கொண்டிருக்கும்

ஹஜ்ரத் மௌலானா **துல்பிகார் அஹ்மது ஸாஹிப்** தாமத்
பரக்காத்துஹூம் அவர்களின் அற்புதமான சொற்பொழிவுகள்

1. **"இல்லத்தரசிகளுக்கு இருபது போதனைகள்"**
2. **"கணவனின் மனதை வெல்வது எப்படி?"**

இந்த இரண்டும் தமிழ் கூறும் நல்லுலகிற்கு பயன்தரும் வகையில்
அன்பு சகோதரர் மௌலவி, ஹாபிழ் **எஸ்.ஷேக் அப்துல்லாஹ்**
யூஸுபி அவர்கள் இனியத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்கள்.

அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் புதுமையான முறையில், எளிமையான நடையில் வகுத்து, தொகுத்து தந்துள்ளார்கள். அவர்களின் இம்முயற்சி பாராட்டக்குரியது.

ஒவ்வொரு இஸ்லாமிய இல்லத்தரசிகளிடமும் இருக்க வேண்டிய அற்புதமான நூல்.

அனைவரும் அறிந்து அறிவமுதம் பெறுவோம் !

வல்ல நாயகன்! நூலாசிரியருக்கு சிறந்த நற்கூலி வழங்குவானாக! இச்சிறிய பணி தொடர நல்லருள் புரிவானாக!

மௌலானா, மௌலவி,
**முஹம்மது அலி** ஹஜ்ரத்
20.04.1435
21.02.2014

மனைவி என்பவள் கணவனின் வாழ்க்கையில் நிம்மதிக்காகவே அல்லாஹ்வின் புறத்திலிருந்து வழங்கப்பட்ட அழகான அன்பளிப்பாக இருக்கிறாள். அவள் நல்ல குணமுள்ளவளாக இருந்தால் பாலைவனத்தைச் சோலைவனமாக்கிவிடுவாள். பாழடைந்த வீட்டை அமைதிப் பூங்காவாக்கிவிடுவாள். அவளிடம் நன்னடத்தையும் நற்குணமும் நிரம்பியிருந்தால் அவள் மணம் கமழும் மலராவாள். நபி (ஸல்) நல்லொழுக்கம் உள்ள பெண்ணை இப்படி அறிமுகம் செய்கிறார்கள். "உலகமே சிற்றின்பம்தான். அச்சிற்றின்பங்களில் மிகச் சிறந்தது, நல்லொழுக்கம் உள்ள பெண்ணாவாள்". எனவே, உலகில் மனிதனுக்கு வழங்கப்படும் மிகச்சிறந்த பரிசு நல்ல மனைவிதான்.

மலரின் உள்ளே

## 1. “இல்லத்தரசிகளுக்கு இருபது போதனைகள்”

## 2. "கணவனின் மனதை வெல்வது எப்படி?"

வ.எண் பக்கம்

# இல்லத்தரசிகளுக்கு இருபது போதனைகள்

அல்லாஹு தஆலா இயற்கையிலேயே பெண்ணுக்குள் கட்டுப்படுதல், அன்பு, இரக்கம் ஆகிய உணர்வுகளை வைத்துள்ளான். ஒரு பெண், தன் வாழ்வில் மூன்று வகையான நிலைகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. உதாரணமாக, தந்தை, சகோதரன் மற்றும் கணவனுக்கு கட்டுப்படுதல், தாய், சகோதரி, கணவன் வீட்டு பெண்களுடன் அன்பு பாராட்டுதல் மேலும் தன் பிள்ளைகளிடம் இரக்கம் காட்டுதல்.

அல்லாஹு தஆலா அவளுக்குள் இந்த மூன்று உயர் பண்புகளையும் வைத்துள்ளான். தந்தை இருக்கும்போது அவருக்கு கட்டுப்பட்டு நடப்பாள் தந்தைக்குப் பின் தன்னுடைய சகோதரனுக்கு கட்டுப்படுவாள். அவன் வயதில் இவளைவிட சிறியவனாக இருந்தாலும் அவனைத் தன் தந்தையின் ஸ்தானத்தில் வைத்து அவனது பேச்சைக் கேட்டு நடப்பாள். இரக்க குணம் எந்தளவு என்றால் அடுத்தவரின் குழந்தை அழுதாலும் இவளது மனம் வலிக்கும். ஒரு பெண் எந்தக் குழந்தை அழுவதையும் தாங்கிக் கொள்ள மாட்டாள்.

## சிறந்த மனைவியின் நான்கு பண்புகள்

இஸ்லாமியக் கண்ணோட்டத்தில் எந்தப் பெண்ணிடம் நான்கு தன்மைகள் இருக்குமோ அவளே சிறந்த மனைவியாவாள்.

### முதல் பண்பு

**தீனுடைய காரியங்களில் தன் கணவனுக்கு உதவி செய்பவளாக இருக்க வேண்டும்.** உதாரணமாக, கணவன் குழந்தைகளை தர்பிய்யத் - ஒழுக்கம் கற்பிக்க விரும்புகிறான். பிள்ளைகளுக்கு மார்க்கத்தைக் கற்பிக்க விரும்புகிறான். அல்லது தீன் சம்பந்தப்பட்ட எந்த ஒரு நல்ல நிய்யத் அவனுக்குள்ளே இருந்தாலும் மனைவி அக்காரியங்களில் கணவனுக்கு மந்திரியாக, நல்ல

ஆலோசனைகளை தருபவளாக செயலாற்ற வேண்டும். கணவன் வழிகாட்டுதல் செய்வான். இந்தப் பெண் அதற்கு உறுதுணையாகச் செயல்பட வேண்டும்.

### இரண்டாவது பண்பு

**"கணவன் அவளைப் பார்த்தால், பார்த்த உடன் அவன் மனம் மகிழவேண்டும்"** என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நினைவில் வையுங்கள்! முக அழகுள்ள மனைவியைப் பார்த்தால் கண்ணுக்கு மகிழ்ச்சி. ஆனால் அக அழகு கொண்ட மனைவியைப் பார்க்கும் போதுதான் உள்ளத்திற்கு மகிழ்ச்சி. இதனால் தான் பௌர்ணமி நிலவைப் போன்ற மனைவிமார்களை அடைந்த எத்தனையோ மனிதர்கள் அப்பெண்கள் பிடிவாதக்காரிகளாக எந்நேரமும் கணவனுடன் சண்டை சச்சரவு செய்பவர்களாக இருப்பதினால் அவர்களைப் பார்க்கவும் விரும்புவதில்லை. நபி (ஸல்) அவர்களின் வார்த்தையின் ஆழத்தைப் பாருங்கள்! அழகைப் பாருங்கள்! எவ்வளவு அழகாகக் கூறியுள்ளார்கள்! மனைவியின் இரண்டாவது பண்பு அவளைப் பார்த்தாலே உள்ளம் குதூகலிக்க வேண்டும். எந்தப் பெண் அதிகம் பணிவிடை செய்பவளாக, வாக்கைக் காப்பாற்றுபவளாக, பேச்சைக் கேட்பவளாக நலவுகள் நிறைந்தவளாக இருப்பாளோ அவளது முகத்தில் அவனுடைய பார்வை பட்டாலே அவன் உள்ளம் பூரித்து விடும். ஆக, மனைவியிடம் இருக்க வேண்டிய இரண்டாவது பண்பு அவள் இந்த அளவு நல்லவளாக பேணுதல் உள்ளவளாக, பணிவிடை செய்பவளாக இருக்க வேண்டும் கணவன் அவளைப் பார்த்தால் அவனது அகம் மகிழ வேண்டும்.

### மூன்றாவது பண்பு :

மனைவியிடம் மூன்றாவதாக இருக்க வேண்டிய பண்பு பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது; **"அவள் தன் கணவனின் பேச்சை கேட்டு நடக்க வேண்டும்"**. வீட்டு நிர்வாகத்தை நிர்வகிப்பதற்காக அல்லாஹுதஆலா கணவனை வீட்டுத் தலைவனாக ஆக்கி இருக்கின்றான். இன்று சிறிய சிறிய புராஜக்ட்டுகளுக்காக யாராவது

ஒருவரை இன்சார்ஜாக ஆக்குகிறார்கள். அப்படி ஒருவரை பொறுப்பாளராக ஆக்கவில்லை என்றால் எல்லோரும் இன்சார்ஜர்களாகிவிடுவார்கள்.

தொழில் நிறுவனங்களுக்கு ஒரு மேனேஜர் இருப்பார். அவர் அனைவரையும் ஒன்றிணைப்பார். கண்காணிப்பு செய்வார். மேலும் வியாபாரத்தை நிர்வாகம் செய்வார். இவ்வாறே அல்லாஹ்வும் சிறிய வீடொன்றில் ஒரு மேனேஜரை உருவாக்கியுள்ளான் . ஆணுக்கு பொறுப்பைக் கொடுத்து அமீராக்கி உள்ளான். பெண்ணை இரண்டு காரணங்களின் அடிப்படையில் அமீராக ஆக்கவில்லை.

1) பெண் அமீராக ஆகியிருந்தால் வெளி வேலைகளை நிறைவேற்ற வேண்டியது வரும். அவள் எப்படி சமாளிப்பாள்?

2) இயற்கையாகவே பெண்களின் சுபாவத்தில் மென்மை இருக்கிறது. சீக்கிரம் உணர்ச்சி வசப்பட்டுவிடுவாள். எனவே அவளது தீர்மானங்களும் அவசர முடிவாகவே இருக்கும். (தலாக் உரிமை மட்டும் பெண்ணுக்கு கொடுக்கப்பட்டிருந்தால்... ஆண் வாழ்கையில் 3 முறை தான் தலாக் சொல்வான். ஆனால் இவளோ ஒரு நாளைக்கு 300 முறை சொல்லி விடுவாள்) இதனால் தான் அல்லாஹு தஆலா ஆணை வீட்டுக்கு அமீராக ஆக்கினான்.

அல்லாஹு தஆலா குர்ஆனில் 'ஆண்கள் பெண்களை நிர்வகிக்கிறவர்கள்' என்று கூறுகிறான் . அதாவது அவர்கள் இல்லற வாழ்க்கையின் அச்சாணியாக இருக்கிறார்கள். பெண்களுக்கு அமீராக இருக்கிறார்கள். இப்படி படைத்தவனே தீர்மானித்த பிறகு இதில் சண்டையிடுவதற்கு என்ன அவசியம் வந்தது? என் பேச்சு ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்... என் கை தான் ஓங்கி நிற்க வேண்டும் என்று மனைவி நினைப்பது இல்லற வாழ்வை நாசமாக்கிவிடும் ஒரு வீணான காரியமாகும். எனவே நல்ல மனைவி தன் கணவனைத் தன்னைவிட பெரியவனாக மதிப்பாள். ஏனெனில் அல்லாஹ்வே அவனைப் பெரியவனாக்கி இருக்கிறானே!

தன் கணவனை விட அதிகம் படித்து தன் கணவனை விட அறிவில், படிப்பில், ஆற்றலில் சிறப்புப் பெற்றிருந்தும் கூட எல்லா

காரியங்களிலும் தன்கணவனையே முன்னிறுத்தி எல்லா வேலைகளும் தன் கணவன் மூலமே நடைபெற வேண்டும் என்று நினைக்கின்ற பெண்கள் எவ்வளவு சிறந்த மனைவிமார்களாக இருப்பார்கள்! அப்பெண்கள் மக்களுக்கு முன் தன் கணவனையே உயர்ந்தவனாகக் காட்ட விரும்புகின்றனர். எல்லா வேலைகளையும் தானே முடித்து விட்டு, அல்லாஹ் கணவனை உயர்வாக்கி இருக்கிறான் என்ற காரணத்தால் அவற்றின் நற்பெயரைத் தன் கணவனுக்குச் சூட்டிவிடும் பெண்களைப் பார்த்து அல்லாஹ் எவ்வளவு சந்தோஷப்படுவான்!

ஆனால், தற்காலத்தில் ஷைத்தான் ஏற்படுத்தியுள்ள முஸீபத் என்னவென்றால், திருமணத்திற்குப் பிறகு கணவன் மனைவி இருவரும் சேர்ந்து வீட்டில் இறுதி முடிவு யார் செய்வது? என்பதை தீர்மானிப்பதே இல்லை. எந்த ஒரு ஜமாஅத்தாக இருந்தாலும் அதற்கு ஓர் அமீர் அவசியம் இருக்கவேண்டும் என்பது மார்க்கத்தின் கட்டளையாகும். அல்லாஹ்வின் உதவி அந்த அமீருடன் இருக்கும். அப்பொழுது அமீர் என்ன முடிவு செய்தாலும் அல்லாஹ்வின் உதவி உடனிருக்கும். அதே போல் கணவன் வீட்டின் அமீராவார். எனவே கணவன் என்ன முடிவு செய்தாலும் அதில் பரக்கத் இருக்கும்.

மனைவி தன் படிப்பை வைத்து தன் அறிவின் மூலம் மற்றொரு கருத்தை முன் வைக்கிறாள். அது வெளிப்படையில் நல்லதாகத் தெரிகிறது. கணவனை நிர்பந்தப்படுத்தி அதை ஒப்புக்கொள்ள வைத்து விட்டாலும் மனமுவந்து அவன் அதனை ஏற்றுக் கொள்ளாத வரை அதில் பரக்கத்தை எதிர்பார்க்க முடியாது.

எனவே மனைவி எக்காரியம் செய்ய நினைத்தாலும் கணவனை முற்படுத்த வேண்டும். அவனைத் தன்னோடு சேர்த்துக் கொண்டு அவனது நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அவனின் மனதைக் குளிரச் செய்து அவன் மூலமே முடிவெடுக்கச் செய்ய வேண்டும். பிறகு அந்த முடிவில் பரக்கத்தைப் பார்க்க முடியும்.

"நீங்கள் ஒரு விஷயத்தை வெறுக்கலாம். ஆனால் அது உங்களுக்கு நன்மையாக இருக்கும். அல்லாஹ் (இவற்றை நன்கு) அறிவான். நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான். (அல்குர்ஆன் 2:216)

இதனால் தான் வீடுகளில் எந்தப் பெண்கள் தங்களின் மேலோட்டமான பார்வையின் அடிப்படையில் ஆலோசனை செய்து பேசி முடிவு எடுக்கிறார்களோ அவர்களின் மஷ்வராவில் அல்லாஹ் பரக்கத் செய்வானா? மாட்டானா? என்பதற்கு எந்த உத்திரவாதமும் இல்லை. ஆனால் சிறந்த மனைவி, தன் ஆலோசனையில் பரக்கத் ஏற்படுவதற்காக எப்படியாவது தன் கணவனின் சம்மதத்தைப் பெற்றிடுவாள். சிறந்த மனைவிக்கு கணவனைச் சமாதானப்படுத்தி சம்மதம் பெறுவது சுலபம். ஏனெனில், அந்த அடியான் ஒரு விஷயத்தில் முடியாது என்று மறுத்துவிட்டாலும் மனைவியுடன் அவன் சந்தோஷமாக இருக்கும்போது இரண்டு முறை ``ஆம்'' என்பான். எனவே, கணவனின் சுபாவத்தைப் புரிந்து சந்தர்ப்பத்தைக் கவனித்துப் பேசுவது சிறந்த பண்பாகும். இடம், பொருள், ஏவல் அறிந்து பேசுவது தங்கத்திற்கு ஒப்பானது.

ஆக கணவனின் பேச்சைக் கேட்டு நடப்பது சிறந்த மனைவியின் மூன்றாவது பண்பாகக் கூறியுள்ளார்கள். அதாவது அவளிடம் கட்டுப்பட்டு நடக்கும் ஆர்வம் இருக்க வேண்டும். 'இது தான் என் இரட்சகனின் கட்டளை; இதில் தான் என் வாழ்வின் பரக்கத் மறைந்திருக்கிறது' என்று நம்ப வேண்டும்.

### நான்காவது பண்பு

அவள் தனது கற்பையும் கண்ணியத்தையும் பாதுகாப்பவளாக இருக்க வேண்டும். ஆண்கள் போர்க்களத்திற்கு சென்று (தீனைப் பாதுகாக்க) ஜிஹாத் செய்கின்றனர். பெண்கள் தங்கள் வீடுகளில் இருந்து கற்பைக் காப்பதுதான் பெண்களின் ஜிஹாதாகும். தன் நன்னடத்தை, நற்பண்புகளின் மூலம் தங்கள் கணவனின் நன்மதிப்பைப் பெற வேண்டும். நல்ல மனைவி தன் நன்னடத்தையின் மூலம் கணவனின் உள்ளத்தில் ஆட்சி செய்வாள். கணவன் வீட்டிற்கு தலைவனாக அமீராக இருக்கிறான் என்றால் நல்ல மனைவி தன் நற்பண்பு, கற்பொழுக்கம், வழிபடும் தன்மையின் மூலம் தனது கணவனின் உள்ளத்தில் சிம்மாசனமிட்டு அமர்ந்து ஆட்சி செய்வாள்.

### பாக்கியசாலி யார்?

இன்று சிலரின் வெளிரங்கத்தைப் பார்த்து இவர் பெரிய பாக்கியசாலி என்று மக்கள் கூறுகின்றனர். உண்மையில் தனக்குக் கிடைத்தவற்றை பொருந்திக்கொண்டு வாழத்தெரிந்தவர் தான் உண்மையான பாக்கியசாலி. மீண்டும் கவனமாகக் கேளுங்கள்....! தனக்குக் கிடைத்தவற்றைப் பொருந்திக்கொண்டு வாழத் தெரிந்தவர் தான் உண்மையான பாக்கியசாலி. எனவே பெற்றோர் ஆலோசனை செய்து பெண்ணுக்குத் திருமணம் நடத்தி வைத்தனர் என்றால் கிடைத்த கணவனைப் பொருந்திக்கொண்டு சந்தோஷமாக வாழ வேண்டும்.

ஆனால் சில பெண்கள் எனக்கு நல்ல மாப்பிள்ளையைத் தேர்வு செய்யவில்லை என்று புலம்பியே வாழ்க்கையை கழித்துவிடுகின்றனர். ஆரம்பத்தில் பேசி முடித்தபோது பெண்ணும் சந்தோஷமாக இருந்தாள். பெற்றோரும் சந்தோஷமாகத் தான் இருந்தனர். இப்பொழுது ஏதாவது சிறுகுறை தென்பட்டால் அது விதியில் எழுதப்பட்டது. எனவே அதைப் பொருந்திக் கொள்பவளே பாக்கியம் பெற்றவள். எனவே அதை சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளுங்கள்! பிறகு அல்லாஹ் எப்படிப்பட்ட பரக்கத்துகளை ஏற்படுத்துகிறான் என்று பாருங்கள்.

### அக அழகா? முக அழகா?

பெண்களே! நீங்கள் உங்கள் நன்னடத்தை மூலமாகத் தான் வீட்டில் நற்சூழலை உருவாக்க முடியும். ஆயுத பலத்தை எதிர்க்கும் சக்தி பெற்றவர்கள் கூட நற்குணங்களை எதிர்க்க முடியாமல் கைதியாகி விடுவார்கள். நீங்கள் உங்கள் உயர் பண்புகளின் மூலம் கணவனின் உள்ளத்தை வெற்றி கொள்ள வேண்டும்.

நீங்கள் வெளித்தோற்றத்தில் பிறரைப் போல் அழகில்லாமல் இருக்கலாம். ஆனால் தன் நற்பண்புகளால், நல்ல நடத்தையால் பிறரை விட பன் மடங்கு அழகாகலாம். இது மனிதனின் கையில் தான் இருக்கிறது. நல்ல குணங்களை, நல்ல பழக்கங்களைத் தமதாக்கி பிறரை விட அழகிய குணவதியாகுங்கள்! ஒரு பெண் தனது கோபத்தால், நாவின் வேகத்தால், தகுதியின்மையால் கணவனின் மனதில் தாழ்ந்து

போய் விட்டாள் என்றால் தன் வெளி அழகைக் கொண்டு அவனது பார்வையில் உயர்ந்து விட முடியுமா?

எனவே வெளித் தோற்றத்தை விட உள்அழகிற்கு அதிக முக்கியத்துவம் அளியுங்கள். வெளியழகு சிலநாட்கள் தான்... உள்ளழகு உயிருள்ள வரை இருக்கும். வெளியழகால் கண்களுக்கு மகிழ்ச்சி என்றால் உள்ளழகால் மனதிற்கு மகிழ்ச்சி. எனவே மனைவி தனக்குள்ளே நற்குணங்களை குடியேற்றிக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான் நல்ல சூழ்நிலையை உருவாக்க முடியும்.

## பெண்களின் ஆன்மீகப் பாதை

ஒரு முக்கியமான விஷயத்தைக் கூறுகிறேன். நம்முடைய ஷைகுமார்கள் கிதாபுகளில் எழுதியுள்ளார்கள். ஒரு பெண் தன் கணவனுக்கு வழிபட்டு வந்தால் அவள் ஆன்மீகத்தின் அனைத்துப் படித்தரங்களையும் கடந்து விட முடியும். ஆண்கள் பெரும் பயிற்சிகளை மேற்கொண்டு கடக்க வேண்டிய படித்தரங்கள் அனைத்தையும் ஒரு பெண் தன் கணவனுக்குக் கட்டுப்படுவதன் மூலம் அடைந்து கொள்வாள்.

ஒரு ஷைகுக்குக் கட்டுப்படுவதால் அடைந்து கொள்ள முடியாத பலன்களையும் ஒரு பெண் தன் கணவனுக்குக் கட்டுப்படுவதன் மூலம் பெற்றுக் கொள்வாள் என்பது இந்த அடியேனின் கூற்று. ஏனெனில் கணவன் எப்பொழுதும் வீட்டில் இருப்பவன். அவனது கசப்பான வார்த்தைகளைக் கேட்டு பொறுமை கொள்வதால் மனம் பக்குவப் படுகிறது. 'நான்' என்ற அகம்பாவம் செத்து விடுகிறது. அப்பொழுது மனிதன் தன் நஃப்ஸை அழித்துக் கொள்ள சக்தி பெறுகிறான்.

எனவே தான் ஒரு இறைநேசருக்கு முன்னால் தன்னை முழுமையாக ஒப்படைக்க வேண்டுமென்று ஆண்களுக்குக் கூறப்படுவதைப் போல் தன் கணவனுக்கு முன்னால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று பெண்களுக்கும் அறிவுரை கூறப்பட்டுள்ளது. ஆனால் இன்றைய பெண்கள், கணவனின் உள்ளம் நம் கைப்பிடிக்குள் வந்து விட்டால் நாம் விரும்பியபடி ஆட்டுவிக்கலாமே என்று ஆசிக்கின்றனர்.

### ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே உள்ள வேறுபாடு

நாம் பார்த்த வரை ஆண்கள், ஆன்மீகச் செல்வங்களுக்கு மதிப்பளிக்கின்றார்கள். ஆனால் பெண்களோ உணர்வுகளின் செல்வங்களையே பெரிதாக நினைக்கிறார்கள். ஆன்மீகச் செல்வம் என்பது இறை நெருக்கமாகும். உணர்வுச் செல்வம் என்பது உணவு, உடை, இருப்பிடம் ஆகியவையாகும். எனவே பொதுவாக ஆண்கள் இறையன்பை, இறைநெருக்கத்தை ஆசிக்கின்றனர். பெண்கள் பெரும்பாலும் உணவு, உடை, இருப்பிடம் போன்றவற்றையே யாசிக்கின்றனர்.

### இருபது இனிய அறிவுரைகள்

இல்லற வாழ்க்கை நறுமணமானதாகவும் நிம்மதி ததும்புவதாகவும் ஆக வேண்டும் என்றால் ஒரு நல்ல மனைவி தன் புகுந்த வீட்டில் சில விஷயங்களைக் கவனத்தில் கொண்டு செயல்பட வேண்டும். கணவனுக்கு 10 விஷயங்களைக் கூறினேன். பெண்களுக்கும் இலேசாக மனதில் பதிய வைத்து அதன்படி செயல்படுவது சுலபமாக வேண்டும் என்ற நோக்கத்தில் இருபது விஷயங்களைக் கூறுகிறேன்.

### 1) இறை தியானத்துடன் சமையல் செய்யுங்கள்

இல்லத்தரசிகள் கடைப்பிடிக்க வேண்டிய முதல் விஷயம் என்னவெனில், திக்ருடன் உணவு சமைக்க வேண்டும். ஏனெனில் நீங்கள் சமைக்கும் உணவு மனிதர்களின் உடல்களுக்குள் சென்று ஊட்டச்சத்தாக மாறுகிறது. இந்த உணவு வீட்டிலுள்ள அனைவரின் மீதும் பிரதிபலிப்பை ஏற்படுத்தக் கூடியது. உணவில் சுத்தத்தைக் கவனிக்காமல் அல்லாஹ்வை மறந்த நிலையில் சமைத்தால் அந்த உணவு உடலுக்குள் சென்று நூர் - பிரகாசத்தை ஏற்படுத்துவதற்கு பதிலாக இருளை உண்டாக்கி விடும்.

எனவே இறைதியானத்தை ஏற்படுத்தக் கூடிய உணவைத் தயாரிப்பது பெண்களின் முதல் கடமையாகும். அந்த உணவினால் ஆண்களின் உள்ளங்களில் நற்சிந்தனைகள் பிறக்கும். பாவ இருள்கள்

அகலும். எனவே தான் நல்ல பெண்கள் உணவு தயாரிக்கும் போது அவர்களின் நாவு திக்ரில் திளைத்திருக்கும். கராச்சியில் நண்பர் ஒருவரின் வீட்டிற்கு விருந்துண்ண சென்றிருந்த போது ஹஸ்ரத்! உங்களுக்கு உணவு தயாரிக்கும் போது என் மனைவி 11 முறை சூரா யாஸீன் ஓதி விட்டாள் என்று நண்பர் கூறினார்.

### ஸஹாபிப் பெண்களின் பழக்கம்

ஸஹாபிப் பெண்களின் பழக்கமும் இப்படித்தான் இருந்தது. ஒரு ஸஹாபிப் பெண்மணி தன்னூர் அடுப்பில் ரொட்டி சுட ஆரம்பித்தார். ரொட்டி சுட்டு அடுக்கி அதைத் தன்னோடு எடுத்துச் செல்ல ஆயத்தமான போது, என் ரொட்டிகளும் தயாராகி விட்டன; எனது 3 ஜுஸ்வுகளும் முடிந்தன என்று மற்றொரு பெண்ணிடம் கூறிச் சென்றார்.

உணவு சமைக்கும் போது கையை மட்டும் இயக்காமல் நாவையும் உள்ளத்தையும் அல்லாஹ்வின் பக்கம் லயிக்கச் செய்வது ஸஹாபிப் பெண்கள் மற்றும் நல்ல பெண்களின் பண்பாக இருந்திருக்கிறது. இதனால் உணவில் நூர் - பிரகாசம் உண்டாகும். எனவே நீங்களும் செய்து பாருங்கள். உங்கள் பிள்ளைகளுக்கு ஒளுவுடன் உணவு பரிமாறுங்கள்! திக்ருடன் உணவு ஊட்டுங்கள்! இதனால் உங்கள் பிள்ளைகளிடம் வழிபடும் பண்பு உருவாகும். கணவனுக்கும் திக்ருடன் ஒளுவுடன் உணவு பரிமாறுங்கள். உங்கள் மீதிருக்கும் அவரது அன்பு அதிகமாகும். ஏனெனில் உணவு மனிதர்களில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தும்.

### சந்தேகத்திற்குரிய உணவு

நான் பார்த்த ஒரு நிகழ்வை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். அமெரிக்காவிலுள்ள எங்கள் மதரஸாவில் ஒரு சிறுவன் இரண்டு ஆண்டுகளில் கடைசி ஜுஸ்வை மட்டும் ஓதியிருந்தான். அதற்குமேல் நகரவே இல்லை. என்ன....! இவ்வளவு காலமாகிறதே! என்று நமக்கு பெரும் நெருக்கடியாகி விட்டது. ஆனால் அச்சிறுவன் ஸ்கூலில் முதல் மார்க் வாங்கியவன். Presidential Award (ஜனாதிபதி விருதுக்கு அவனது பெயர் பரிந்துரைக்கப்பட்டிருந்தது. அப்படிப்பட்ட பையனுக்கு என்ன

முஸீபத் வந்தது? ஏன் குர்ஆனின் செல்வத்தை விட்டும் தூரமாகி விட்டான் என்ற சிந்தனையில் இருந்தேன்.

ஒரு நாள் ஒரு விஷயம் மனதில் நெருடியது. அவனை அழைத்து நீ என்ன சாப்பிடுகிறாய் என்று கேட்டேன். அதற்கு அச்சிறுவன் ஏழெட்டு அமெரிக்க ஹோட்டல்களின் பெயர்களைச் சொல்லி இந்த ஹோட்டலில் இது சாப்பிடுவேன் அந்த ஹோட்டலில் அது சாப்பிடுவேன் என்று அடுக்கினான். அப்பொழுது தான், வெளியிலுள்ள ஹராமான உணவுகளை உட்கொள்வதின் பீடைதான் அவனுக்கு குர்ஆனின் பரக்கத்தை இழக்கச் செய்துவிட்டது என்று புரிந்தது.

அந்த அப்பாவிச் சிறுவன் முன்னால் ஓதிக் கொண்டிருக்க பின்னுள்ளதை மறந்து விடுகிறான். உஸ்தாதுக்கும் சிரமமாகி விட்டது. எனவே அவனது பெற்றோரை அழைத்து ''பாருங்கள், உங்கள் மகனுக்கு வெளி உணவு வாங்கிக் கொடுப்பீர்கள் என்றால் அவனை கையோடு அழைத்துச் சென்று நீங்களே ஓதிக் கொடுங்கள். எங்களிடம் தான் அவன் ஓத வேண்டும் என்றால் வெளி உணவு வாங்கித் தர மாட்டோம் என்று வாக்குறுதி கொடுங்கள்'' என்று கூறினோம்.

அச்சிறுவனின் தாய் நல்ல தீன் பற்றுள்ள பெண்ணாக இருந்தார். தந்தையும் ஹலாலாக சம்பாதிப்பவராக இருந்தார். எனவே இருவரும் அவனுக்கு வீட்டில் ஹலாலான சாப்பாடுதான் கொடுப்போம் என்று வாக்குறுதி அளித்தனர். பிறகென்ன....! உங்களுக்கே திகைப்பை உண்டாக்கும் நிகழ்வு நடந்தது...! ஆம்! அச்சிறுவன் அடுத்த ஒரே வருடத்தில் முழு குர்ஆனையும் ஓதி முடித்து விட்டான். இப்படித்தான் நமது உணவு நம்மில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்துகிறது.

நமது ஷைகுமார்கள் அடிக்கடி கூறுவார்கள். இரண்டே விஷயங்கள் தான் தஸவ்வுஃப் - (ஆன்மீகத்தின்) உயிர்நாடியாக இருக்கின்றன 1.ரிஸ்கே ஹலால் (ஹலாலான உணவு) 2. ஸித்கே மகால் (வாக்கில் சுத்தம்) ஓர் அடியானுக்கு இவ்விரண்டும் கிடைத்து விடுவது அவருக்கு இரு சிறகுகள் முளைப்பதைப் போலாகும். அச்சிறகுகளின் மூலம் அவர் அல்லாஹ்வின் நெருக்கத்தைச் சுலபமாக அடைந்து கொள்வார். எனவே குழந்தைகளுக்குக் கொடுக்கும் உணவு சந்தேகத்திற்குரியதாக இருக்கக் கூடாது.

அதேபோல் பெண்கள் பாத்திரங்களைக் கழுவுவதிலும் சுத்தத்தைக் கவனிப்பதில்லை. மேலும் உணவு சமைக்கும் போது பாடல்களின் இசை ஒலித்துக் கொண்டே இருக்கிறது. உணவு சமைத்துக் கொண்டே ஏதேதோ கேட்கின்றனர். சற்று சிந்தித்துப் பாருங்கள்! அந்த உணவில் பரக்கத்திற்குப் பதிலாக இருள் சூழ்ந்து விடாதா? பிறகு அதன் முஸீபத் உங்களைத் தானே பாதிக்கும்.... அந்த உணவினால் கணவன் தீன்பற்றில்லாதவனாக ஆகிவிட்டால் முஸீபத் உங்களுக்குத் தானே! பிள்ளைகளிடம் தீன் இல்லாமல் போய்விட்டாலும் பிரச்சனை உங்களுக்குத் தானே! இரு புறத்திலிருந்தும் முஸீபத்துகள் உங்கள் தலையில் தான் வந்து விழும் என்றிருக்கும் போது அவர்கள் உள்ளத்தில் நற்சிந்தனைகளின் மீதும் நற்செயல்களின் மீதும் ஆசையை ஏற்படுத்தும் உணவை ஏன் அவர்களுக்கு நீங்கள் தரக் கூடாது?

மேலும் ஒரு முக்கியமான விஷயம், நீங்கள் எப்பொழுது சமையல் செய்தாலும் அந்த உணவில் உறவினரையும் நிய்யத் செய்து கொள்ளுங்கள். வீட்டில் உள்ளவர்களுக்காக உணவு சமைக்கிறேன். அத்துடன் இரண்டொரு விருந்தினருக்கும் சேர்த்துச் சமைக்கிறேன். விருந்தினர் வந்துவிட்டால் தாமதப்படுத்தாமல் அவர்களுக்கு விருந்தளிக்க வேண்டும் என்று நிய்யத் செய்து கொள்ளுங்கள். ஒரு வேளை விருந்தினர் வரவே இல்லை என்றாலும் தினமும் விருந்தினருக்காக நிய்யத் செய்து வந்த காரணத்தால் அத்துணை விருந்தாளிகளுக்கும் உணவளித்த நன்மைகளை அல்லாஹ் உங்களின் செயலேட்டில் பதிவு செய்கிறான்.

## 2) வேலைகளை குறித்த நேரத்தில் முடிக்க வேண்டும்

இரண்டாவது முக்கிய விஷயம், வேலைகள் அனைத்தையும் அந்தந்த நேரத்தில் முடித்துப் பழகுங்கள். இன்றைய வேலையை நாளைக்குச் செய்து கொள்ளலாம் என்று தள்ளிப் போடாதீர். நாளை நாளை என்று சொல்லிச் சொல்லியே வேலைகள் குவிந்து விடும். பிறகு மனிதன் அவற்றில் கொஞ்சத்தைக் கூட செய்ய முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டுவிடுவான்.

## ஆண்களை விட அதிக நன்மை பெறும் பெண்கள்

ஹள்ரத் ஃபாத்திமா ஜஹ்ரா (ரலி) வின் வாழ்வைப் பாருங்கள். தங்கள் வேலைகளைத் தாங்களே செய்து வந்தார்கள். இதனால் அவர்களின் புனிதக் கரங்களில் தழும்புகள் ஏற்பட்டிருந்தன என்று ஹதீஸில் வருகிறது. ஹள்ரத் ஆயிஷா ஸித்தீக்கா (ரலி) மற்றும் அஸ்மா பின்த் அபூபக்கர் (ரலி) இருவரும் தங்கள் வீட்டு வேலைகளைத் தாங்களே செய்து வந்ததாக வரலாறு கூறுகிறது.

ஆண்கள் தொழுகை விரிப்பில் அமர்ந்து இபாதத் – வணக்கங்கள் புரிவதால் அவர்களுக்குப் பெரும் நன்மைகள் கிடைக்கின்றன என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் அதை விட அதிகமான நன்மைகள் நீங்கள் வீட்டு வேலைகளைச் செய்யும் போது உங்களுக்குக் கிடைத்து விடுகிறது.

## உன் சகோதரர் பெரிய அறிவாளிதான்...

பாயஜீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள், எப்பொழுதும் பள்ளியிலேயே நபில் தொழுகையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த ஒரு வாலிபரைப் பார்த்து அவரைப் பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவ்வாலிபர் எனது சகோதரர் என் வியாபாரத்தைச் சமாளித்துக் கொள்கிறார். எனது தேவைகளையும் அவரே பூர்த்தி செய்யப் பொறுப்பேற்றுக் கொண்டார். எனவே நான் முழுமையாக இபாதத்துகளில் ஈடுபட்டு வருகிறேன் என்றார். அப்படியானால் உன் சகோதரர் பெரிய அறிவாளி தான்! உனது அனைத்து வணக்கங்களின் நன்மைகளையும் இலேசாகப் பெற்றுக் கொள்கிறாரே...! உன்னை விடச் சிறந்த வேலையில் ஈடுபட்டு வருகிறாரே....! என்று பாயஜீத் பிஸ்தாமீ (ரஹ்) கூறினார்கள். ஆக, முஸல்லாவின் மீது மட்டும் இபாதத் அல்ல! மாறாக பெண்கள் வீடுகளில் செய்கின்ற வேலைகள் அனைத்தும் இபாதத்தாகவே கணிக்கப்படும்.

இன்றைய பிரச்சனை என்னவென்றால் பெண்கள் வீட்டு வேலைகளை இபாதத் என்று நினைக்காமல் முஸீபத் என்று நினைக்கின்றனர். எனவே தான் வேலைக்காரி கிடைத்தால் அவளிடம் வேலைகளை ஏவிவிட்டால் அவள் செய்து முடித்து விடுவாளே என்ற

ஆசையில் எப்பொழுதும் இருக்கின்றனர். இப்படியே வேலை வாங்கிப் பழகி விட்டால் தன் உடலுழைப்பால் தனது செயலேட்டில் பதியப்பட வேண்டிய நன்மைகள் கிடைக்காமல் போய்விடும். பிறகு எப்படி அல்லாஹ்விடம் உங்களது அந்தஸ்து உயர முடியும்?

### சிறந்த பெண்மணி யார்...?

எனவே தான் வீட்டு வேலைக்காக வியர்வை சிந்துவதும் சிரமம் எடுப்பதும் இஷாவிற்குச் செய்த உளூவால் பஜ்ரையும் தொழுவதைப் போன்ற நன்மைகளைப் பெற்றுத் தரும். ஆகையால் பெண்கள் வீட்டு வேலைகளை சந்தோஷமாக எடுத்துச் செய்ய வேண்டும். இந்த வேலைகளின் மூலம் என் ரப்பு என்னைப் பொருந்திக் கொள்வான் என்ற சிந்தனை வேண்டும். 'யாருடைய உள்ளம் அல்லாஹ்வின் நினைவில் திளைத்திருக்கும் நிலையில் கைகள் வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருக்கின்றனவோ அவளே சிறந்த பெண்ணாவாள்.' என்ற கருத்தில் ஒரு ஹதீஸே வருகிறது.

பெண்கள் வீட்டு வேலைகளைத் தாங்களே செய்யவேண்டும் என்பதுதான் நபி (ஸல்) அவர்களின் ஹதீஸின் கருத்து. இதனால் உங்களுக்கு இரு பயன்கள் கிடைக்கும். 1) வேலைகள் பூர்த்தியாவதுடன் நன்மையும் கிடைக்கிறது. 2) உங்கள் உடல் ஆரோக்கியம் பெறுகிறது. இன்று வீட்டு வேலைகளைச் செய்யும் பழக்கமில்லாத காரணத்தால் சிறு வயதிலேயே உடலை நோய்கள் ஆக்கிரமித்து விடுகின்றன.

எனக்குக் கடுமையான தலைவலி இருக்கிறது.... எதையாவது கொஞ்சம் சிந்தித்தாலும் தலைவலிக்க ஆரம்பித்து விடுகிறது என்கிறாள் ஒரு பெண். எனக்கு இடுப்பு வலி ஆரம்பமாகி விட்டது என்று சில பெண்கள் கூறுகின்றனர். இன்னும் சிலருக்கு பார்வைக் கோளாறு வேறு...! இந்தப் பிரச்சனைகளுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் உடலுழைப்பு செய்யாதது தான்.

### உம்முல் முஃமினீன் அவர்களின் வீட்டு உழைப்பு

ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டில் ஒரு திருகை இருந்தது. ரொட்டி சுடத் தேவையான கோதுமையை அதில் அவர்களே

அரைப்பார்கள். உம்முல் முஃமினீன் அவர்களே தங்கள் கரங்களால் திருகையில் மாவு அரைப்பார்கள் என்றால் இன்றைய பெண்கள் வீட்டு வேலைகளை ஏன் தாங்களே செய்யக் கூடாது!

வீட்டு வேலைகளைச் செய்யாமல் இருந்து விட்டு பிறகு உடலில் கொழுப்புச் சத்து அதிகமாகி விட்டது... எனவே இப்பொழுது நீச்சல் குளம் செல்ல வேண்டும்! எங்களுக்கு உடற்பயிற்சி செய்ய சாதனங்கள் வேண்டும் என்று கேட்கின்றனர். இது தேவையா? வீட்டு வேலைகளை மட்டும் செய்து வந்தால் நன்மையும் கிடைக்கும். மேலும் கணவனின் உள்ளத்தையும் வென்றுவிடலாம். பிறகு மூன்றாவதாக இதுவே சர்க்கரை நோய்க் கொல்லியாகவும் ஆகிவிடும். பிறகு அல்லாஹ் உங்கள் உடலிற்கு ஆரோக்கியத்தைக் கொடுக்கிறான்.

எனவே வீட்டு வேலைகளைத் தன் கௌரவமாக, தனது முக்கிய கடமையாகக் கருத வேண்டும். முஸல்லாவில் அமர்ந்து இபாதத் செய்வதை விட வீட்டு வேலைகள் மூலம் அல்லாஹ்விடம் எனக்கு அதிக நெருக்கம் கிடைக்கும் என்று நம்புங்கள்.

## 3) வீட்டை சுத்தமாக வைத்திருங்கள் :

மூன்றாவது காரியம் வீட்டை சுத்தமாக வைத்திருக்க வேண்டும். சில பெண்கள் சோம்பேறித்தனத்தின் காரணமாக எப்பொழுதும் வீட்டைப் பரத்தியே (ஆங்காங்கே பொருட்கள் சிதறிக் கிடக்கும் வண்ணம்) வைத்து பழகி விடுகின்றனர். வீட்டைப் பரத்தி வைப்பதும் பொருள்களை அலங்கோலமாகப் போட்டிருப்பதும் அல்லாஹ்வுக்கு வெறுப்பான செயல்களாகும்.

நபி (ஸல்) அவர்கள் 'அல்லாஹ் தஆலா அழகானவன்! அழகாக இருப்பதை அவன் விரும்புகிறான்' என்று கூறியுள்ளார்கள். அல்லாஹ் தஆலா அழகை விரும்புகிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள் என்றால் வீட்டில் அலங்கோலமாக சிதறிக் கிடக்கும் பொருள்களை அல்லாஹ் தஆலா விரும்புவதில்லை என்று தானே கருத்தாகிறது. எனவே பெண்கள், என் வீட்டுப் பொருட்கள் அடுக்கப்பட்டு வீடு சுத்தமாக இருப்பதை என் அல்லாஹ் விரும்புகிறான். அவனிடம்

என் உழைப்புக்கு மரியாதை கொடுக்கப்படும் என்ற நிய்யத்துடன் வீட்டை சுத்தமாக வைத்திருக்க வேண்டும்.

ஆக நீங்கள் வீட்டில் இருந்து கொண்டு துடைப்பத்தால் சுத்தம் செய்யும் பொழுது வீடு மட்டும் சுத்தமாவதில்லை. மாறாக அல்லாஹ் உங்கள் உள்ளத்தையும் பரிசுத்தப்படுத்துகிறான் என்று நம்புங்கள். வீட்டைப் பெருக்குவது உள்ளத்தின் இருளை விரட்டுவது போன்றதாகும்.

## சுத்தமாக இருப்பவர்களை அல்லாஹ் நேசிக்கின்றான்.

வீட்டை எப்பொழுதும் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். ஏனெனில் அல்லாஹு தஆலா தவ்பா செய்பவர்களையும் நேசிக்கிறான். சுத்தமாக இருப்பவர்களையும் நேசிக்கிறான் (அல்குர்ஆன் 2: 222) என்று அல்லாஹ் கூறுகிறான். எனவே ஒவ்வொரு பொருளும் சுத்தமாக இருப்பதும் அழகாக இருப்பதும் ஒழுங்கு முறையுடன் இருப்பதும் அல்லாஹ்வின் சந்தோஷத்திற்குக் காரணமாகும்.

## புகழ வேண்டாம்

வீட்டை சுத்தமாக வைத்திருந்தால் வீட்டிற்கு வருபவர்கள் புகழ்வார்கள் என்ற நிய்யத் மட்டும் இருந்தால் உங்கள் உழைப்பு அனைத்தும் வீணாகிவிடும். 'வீடு எவ்வளவு அழகாக இருக்கிறது' என்று சிலர் சொல்லி விடுவதால் உங்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது? இவ்வளவு வியர்வை சிந்தி சிரமமெடுத்து விட்டு மக்கள் நாவால் புகழ வேண்டும் என்று நீங்கள் ஆசைப்பட்டால் "நீ நினைத்தது உனக்குக் கிடைத்து விட்டது.புகழ் வார்த்தை கூறப்பட்டுவிட்டது" என்று அல்லாஹ்வும் கூறி வெறும் கையாக விட்டுவிடுவான்.

எனவே இந்த நிய்யத்தைக் கைவிட்டு விடுங்கள். நான் இந்த வீட்டின் சொந்தக்காரி! வீட்டை அழகாக வைப்பது என் பொறுப்பு! அல்லாஹ் அழகானவன். அழகாக இருப்பதை விரும்புகிறான். எனவே நான் என் வீட்டை அழகாக்குகிறேன் என்று நிய்யத் செய்யுங்கள்.

### அழகாக வைத்திருப்பது என்றால் என்ன?

அழகுபடுத்துதல் என்றால் நீங்கள் ஆயிரக்கணக்கான டாலர்கள் மதிப்புள்ள பொருள்களை வாங்கி வந்து வீட்டை அலங்கரிக்க வேண்டும் என்பதல்ல. இதற்கு ஒழுங்குபடுத்துதல் என்று பெயருமல்ல. மாறாக எந்தப் பொருளாக இருந்தாலும் அது சுத்தமாக ஒழுங்கு முறையோடு இருந்தால் போதும். சுத்தமாக இருக்க டாலர்கள் அவசியமில்லை. மாறாக மனிதன் தன் ஆடைகளைத் துவைத்தால் போதும். அழகாகி விடும். இவ்வாறே மற்ற பொருட்களையும் சுத்தமாக ஒழுங்குபடுத்தி வைப்பது வீட்டின் அழகை எடுத்துக்காட்டும். அங்கே விலையுயர்ந்த இறக்குமதி செய்யப்பட்ட கற்களும் இருக்க வேண்டும் அப்பொழுது தான் வீடு அழகாகும் என்பதில்லை. இதைப் புரிந்து கொள்ள முயலுங்கள்!

## 4) கேள்விப்பட்டதையெல்லாம் பரப்பக் கூடாது

கேள்விப்படும் விஷயங்களைப் பரப்பும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளாதீர். பல பெண்கள் கேள்விப்படும் தேவையற்ற விஷயங்களை அப்படியே கணவனிடம் ஒப்பித்து விடுகின்றனர். பிறகு அவஸ்தைப் படுகின்றனர். ஒரு சில விஷயங்களைக் கேட்டு விட்டு உடனே அதைப் பரப்புவது மிகக் கெட்ட பழக்கமாகும்.

அதேபோல், ஒரு பெண் ஏதாவது ஒரு விஷயத்தைக் கூறினால் அது காது வரை வர அனுமதிக்கலாம். ஆனால் அவையனைத்தும் உள்ளத்திற்குள் வர அனுமதிக்கக் கூடாது. சரியானதாக, ஷரீஅத், சுன்னத்திற்குக் கட்டுப்பட்டதாக இருக்கும் விஷயங்கள் மட்டுமே உள்ளத்திற்குச் செல்ல வேண்டும். கேள்விப்படும் விஷயங்களை உடனடியாக இங்குமங்கும் பரப்புவது பெண்களுக்குப் பெரும் முஸீபத்துகள் வரக் காரணமாகிவிடும். பிறகு சொன்னவற்றை நியாயப்படுத்த வேண்டியிருக்கும். நான் அப்படிச் சொல்லவில்லை... இப்படித் தான் சொன்னேன் எ[illegible]ங்கும் கூறவேண்டியிருக்கும் பிறகு பொய் சொல்ல வேண்டிய நிர்பந்தம் ஏற்படும். இவ்வாறே பெரும்பாலான பெண்கள் தாங்கள் பேசியவற்றை மறைக்க (மறுக்க) பொய்யை ஊன்றுகோலாக்கிக் கொள்கின்றனர். பல பெண்கள் பேச்சுக்குப் பேச்சு பொய் சொல்கின்றனர். ஒரு அடியான் பொய் பேசிப்

பழகிவிடும் பொழுது பொய்யர்களின் பட்டியலில் அவனது பெயரைப் பதிவு செய்யும் படி அல்லாஹுதஆலா மலக்குகளுக்குக் கட்டளையிடுகிறான் என்று ஹதீஸில் வருகிறது.

### எல்லோரிடமும் கொட்டக் கூடாது

சில பெண்கள் எல்லோரிடமும் மனம் திறந்து பேசுவார்கள். புதிதாக யார் வந்தாலும் அவர்களிடமும் கொட்டித் தீர்ப்பார்கள். உதாரணமாக இவள் பயணம் செய்யும் வாகனத்தை எதிர்பார்த்து அமர்ந்திருக்கிறாள். அருகில் ஒரு பெண் வந்து அமர்ந்து விட்டால் போதும்! சிறிது அறிமுகமான உடனேயே இரண்டே நிமிடங்களில் கணவனின் அந்தரங்கம், மாமியாரின் குணங்கள் அது மட்டுமல்ல தனது அந்தரங்கத்தையும் கூட ஒன்று விடாமல் சொல்லித் தீர்த்து விடுவாள். கொஞ்சம் பேசிப் பழகியவுடன் பிறருக்கு முன்னால் தன் இரகசியங்களைத் திறந்து வைப்பது எவ்வளவு பெரிய முட்டாள்தனம்! இதனால் பெரும் பாதிப்புகள் ஏற்படும்.``பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பவர்கள் அனைவரும் நல்லவர்களாக இருக்க மாட்டார்கள். பேச்சுகளைக் கேட்பவர்கள் அனைவரும் நலவை நாடுபவர்களாகவும் இருக்க மாட்டார்கள்".

### போட்டு வாங்காதீர்கள்

பெண்களிடம் மற்றொரு பழக்கமும் இருக்கிறது. பிறர் மனதைப் புரிந்து கொள்ள போட்டுவாங்குவார்கள். உங்கள் மாமியார் எப்படிப்பட்டவர்? உங்கள் கணவர் எப்படிப்பட்டவர் என்று கேட்பார்கள். உடனே அவள் தன் கணவனைப் பற்றி மனதில் புதைந்து கிடந்ததையெல்லாம் அடுக்க ஆரம்பித்துவிடுவாள்.

### அவசர முடிவு ஆபத்து

மேலும் ஒரு முக்கியமான விஷயத்தை நினைவில் கொள்ளுங்கள். எப்பொழுதும் அவசர முடிவில் இருந்து பாதுகாப்பாக இருங்கள். ஒரு சில வார்த்தைகளைக் கேட்டு விட்டு யாரைப் பற்றியும் அவர் அப்படிப்பட்டவர், இவள் இப்படிப்பட்டவள் என்று முடிவு செய்து விடக்கூடாது.

இது பெரும் தவறாகும். சில சமயங்கள் உங்கள் குழந்தைகள் உங்களிடம் வந்து அந்தப் பையன் இப்படிச் செய்து விட்டான். அப்படிச் செய்து விட்டான் என்று சொன்னால் இரண்டாம் நபரை விசாரிக்காத வரை முடிவு ஏதும் செய்யக் கூடாது.

ஹள்ரத் லுக்மான் (அலை) தன் மகனுக்கு உபதேசம் செய்தார்கள், மகனே! உன்னிடம் ஒருவன் வந்து இன்ன மனிதன் என் கண்ணை நோண்டி விட்டான் என்று முறையிட்டால் இரண்டாம் நபரிடம் தீர்க்கமாக விசாரிக்காத வரை நீ தீர்ப்பளிக்காதே! ஏனெனில் இவன் அவனது இரண்டு கண்களை நோண்டியிருக்கக் கூடும். எனவே சில வார்த்தைகளைக் கேட்டு (அவசர முடிவு) செய்வதும் பொதுவிதி உண்டாக்குவதும் பெண்களுக்கு முஸீபத்தாக மாறிவிடும்.

### 5) கணவனை துஆ உடன் வழியனுப்புங்கள்

கணவன் வீட்டிலிருந்து வெளியில் செல்லும் சமயங்களில் அவரைத் துஆ உடன் வழியனுப்ப வேண்டும். ஃபீ அமானில்லாஹ் சொல்லுங்கள். துஆ செய்யுங்கள். எப்படி முற்காலத்தில் நமது ஸாலிஹான பெண்கள் தங்கள் கணவரை வழியனுப்பி வந்தார்களோ அது போல் நீங்களும் வழியனுப்புங்கள்.

நம் அமானிதத்தை அல்லாஹ்வின் பொறுப்பில் விடுவது எவ்வளவு நல்ல காரியம்! நீங்கள் உங்கள் அமானிதத்தை அல்லாஹ்வின் பொறுப்பில் விட்டுவிட்டால் அல்லாஹு தஆலா அந்த அமானிதத்தை நன்றாகப் பாதுகாப்பான் அல்லவா? இன்று தன் கணவன் வீட்டைவிட்டு புறப்படும் போது இந்த வார்த்தைகளைக் கூறும் பெண்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்...? மிகக் குறைவு தான். இவ்வாறு சொல்லி அனுப்பாமல் பிறகு கணவனுக்குப் பாதுகாப்பு இருப்பதில்லை என்றும் என் கணவர் வெளியில் சென்றுவிட்டால் அவருக்கு வெளியில் தான் மனம் லயிக்கிறது என்றும் அழுது புலம்புகின்றனர்.

அட...! நீங்கள் தானே உங்கள் அமானிதத்தை அல்லாஹ்வின் பொறுப்பில் ஒப்படைக்கவில்லை? இப்பொழுது அல்லாஹ்விடம் எப்படி

நம்பிக்கை வைக்க முடியும்? அவன் எப்படி பாதுகாப்பான் ? எனவே நல்ல மனைவி எப்பொழுதும் கணவனும் பிள்ளைகளும் வீட்டிலிருந்து புறப்படும் போது துஆச் செய்து அனுப்புவாள்.

மேலும், வாசல் வரை உடன் செல்லுங்கள்! பிறகு ஃபீ அமானில்லாஹ், ஃபீ ஹிஃப்ளில்லாஹ், ஃபீ ஜிவாரில்லாஹ் என்றோ அல்லது இது போன்று வேறு வார்த்தைகளைக் கூறுங்கள்...! அல்லது எனது அமானிதத்தை அல்லாஹ்வின் பொறுப்பில் அனுப்புகிறேன் என்றாவது சொல்லுங்கள். நீங்கள் உங்கள் அமானிதத்தை அல்லாஹ்வின் பொறுப்பில் விட்டுவிட்டால் அல்லாஹ் உங்களை ஒருக்காலும் நஷ்டமடைய விடமாட்டான். அல்லாஹு தஆலாவின் மீதுள்ள யகீனும் நம்பிக்கையும் தானே நமது வாழ்வின் அஸ்திவாரம்! முதலில் கணவன் புறப்படும் போது வாசல் வரை வந்து துஆவுடன் வழியனுப்பிப் பழகுங்கள்! அத்துடன் கணவன் எப்பொழுது வீட்டிற்குத் திரும்பினாலும் எப்படிப்பட்ட வேலையில் நீங்கள் ஈடுபட்டிருந்தாலும் ஒரு நிமிடம் உங்களைத் தயார்படுத்திக் கொண்டு புன் சிரிப்புடன் கணவரை வரவேற்க வேண்டும். மனைவி புன்முறுவல் செய்து மலர்ந்த முகத்துடன் கணவரை வரவேற்கும்போது அந்த மலர் வதனத்தின் மீது பார்வை பட்டவுடன் கணவனின் உள்ளத்தில் காதல் பொங்கும் என்பது சொல்லித் தெரிய வேண்டிய விஷயமல்ல...! இன்று இப்படி வாழும் முறை குறைந்து விட்டது. எனவே வாழ்வில் பிரச்சனைகள் நிரம்பிவிட்டன.

## 6) கணவன் வருவதற்கு முன்பே தன்னை சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஆறாவது முக்கிய விஷயம் கணவன் வரும் நேரத்தில் தன்னை சுத்தமாக வைத்திருக்க வேண்டும். ஆனால் இன்றைய நடைமுறையில் பெண்கள் வெளியில் செல்லும் போது மணப்பெண்ணைப்போல் அலங்காரத்துடன் செல்கின்றனர். கணவன் வீட்டிற்கு வரும் போது அவளைப் பார்த்தவுடன் எரிச்சலாகும் அளவு அழுக்காக, அவலட்சணமாக இருக்கின்றனர். இது பெரும் தவறாகும். முற்காலத்தில் வாழ்ந்த நல்ல பெண்கள் தினமும் கணவன் வீட்டிற்கு வரும் நேரத்தில் தன்னை அலங்கரித்துக் கொள்வார்கள். இப்படிக் கணவனுக்காக

அலங்காரம் செய்து கொள்வது அவர்களிடம் ஓர் இபாதத்தாகவே இருந்து வந்தது. இது பற்றி கிதாபுகளில் அதிகமாக வலியுறுத்தப்பட்டிருந்தும் இன்றைய பெண்கள் இந்த விஷயத்தில் ஏன் கவனம் செலுத்துவதில்லை என்றே தெரியவில்லை.

### இப்படியும் ஒரு பெண்ணா?

ஒரு தீன்தாரிப் பெண்ணைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஒவ்வொரு இரவிலும் அப்பெண் தன்னை அலங்கரித்துக் கொண்டு தன் கணவனிடம், 'உங்களுக்கு என் பணிவிடை தேவையா?' என்று கேட்பாள். கணவர் 'ஆம்' என்று கூறினால் கணவனுடன் இரவை கழிப்பாள். கணவர் "இல்லை எனக்கு தூக்கம் வருகிறது. நான் தூங்க வேண்டும்" என்று கூறிவிட்டால் உடனே அப்பெண் முஸல்லாவில் தன் ரப்புக்கு முன்னால் கைகட்டி நின்று இரவு முழுவதையும் கழித்து விடுவாள்.

இப்படி மனைவி தன் கணவனுக்காக வீட்டில் தன்னை அலங்கரித்துக் கொள்வது அவசியம். அலங்காரம் செய்வது என்றால் தினமும் மணப்பெண் போல் ஆடைகள் அணிய வேண்டும் என்பது கருத்தல்ல! மாறாக நல்ல சுத்தமான ஆடைகள் அணிய வேண்டும். தலை சீவி, முகத்தைக் கழுவிக் கொண்டு நறுமணம் பூசிக் கொண்டால் போதும். இதைத்தான் அலங்காரம் என்று சொல்கிறோம். இந்த அலங்காரம் பெண்கள் வீட்டில் கடைபிடிக்க வேண்டிய கடமைகளில் ஒன்றாகும். இதில் ஒரு போதும் சோம்பல் காட்டக் கூடாது.

### மினுமினுப்பு வேண்டாமே!

வெளியில் செல்லும் போது சாதாரண ஆடையில் செல்லுங்கள், வெளியில் மினு மினுப்பு ஆடைகளைத் தவிர்க்க வேண்டும். சாதாரண ஆடையணிந்து வெளியில் சென்றால் குழப்பங்களிலிருந்து தப்பி விடலாம். ஆடைகளில் எளிமையைக் கையாளுவதுதான் பெண்களின் அழகிற்கு பாதுகாப்பு என்பதை மறந்து விடாதீர்கள். எனவே வெளியில் செல்லும் போது சுத்தமான ஆனால் சாதாரணமான ஆடையில் செல்ல பழகிக் கொள்ளுங்கள். வீட்டில் இருக்கும் போது தன் கணவருக்கு எந்த ஆடை அணியப் பிடிக்குமோ அதை அணிந்துக் கொள்ளுங்கள். அத்துடன் தன்னை அலங்கரித்துத் தயாராகிக் கொள்ளுங்கள்.

ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் ஸஹாபிகளுடன் ஒரு போரிலிருந்து திரும்பும் போது மதீனாவிற்கு வெளியிலேயே தங்கி விட்டார்கள். வீடுகள் மிக அருகில் தான் இருந்தன. வீட்டிற்குச் சென்று விடலாம்... ஆனால் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இங்கேயே தங்கி விடுங்கள். வீட்டிற்குச் செய்தி அனுப்பி விடுங்கள். ஏனெனில் உங்கள் மனைவிமார்கள் உங்களுக்காகத் தம்மைத் தயார்படுத்திக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் தமது இந்த புனிதமான ஸுன்னத்தின் மூலம் பெண்களுக்கு ஒரு பாடத்தைக் கற்றுத் தருகிறார்கள்.

பெண்கள் தன் கணவன் வரும் நேரத்தில் தன் அழுக்கு முகத்தில் மேக்-அப் செய்வதை விட்டுவிட்டு கணவன் வருவதற்கு முன்னரே சுத்தமாகிக் கொள்ள வேண்டும். இது நபி (ஸல்) அவர்களின் ஸுன்னத்தின் படி அமல் செய்வதாகும்.

நீங்கள் சுத்தமாக இருக்கவில்லை என்றால் தினமும் கணவனின் உள்ளத்தில் என் மீது புதிய அன்பு ஏற்பட வேண்டும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? கணவன் திரும்பிப் பார்க்கவில்லை என்றால் பிறகு அழுதால் என்ன பயன்? நீ அவருக்காக துன்யாவையே விட்டு வந்திருக்கிறாய்! பிறகு அவருக்காக உன்னை அலங்கரித்துக் கொள்! அப்பொழுது அவரது உள்ளத்தில் இயற்கையாக உன் மீது அன்பு உருவாகும்.

## 7) உறவு முறையைப் பேண வேண்டும் என்று உறவினர்களிடம் சொல்லுங்கள்

சில விஷேசங்களுக்காக உறவினர்களிடம் செல்ல வேண்டிய தேவையிருக்கிறது என்றால் அப்பொழுது உறவு முறையைப் பேண வேண்டும் என்ற நிய்யத்தில் செல்லுங்கள். உறவினர்களுடன் இணைந்து இணங்கி பிரியத்துடன் வாழ்வது அல்லாஹ்விற்கு மிகவும் பிடித்தமான செயலாகும். எனவே எந்த விஷேசங்களுக்காகச் சென்றாலும் உறவு முறையைப் பேண வேண்டும் என்ற நிய்யத்துடன் செல்லுங்கள், நாம் போகவில்லை என்றால் அவர்கள் வரமாட்டார்கள் என்ற நிய்யத்தெல்லாம் இருக்கக் கூடாது. மாறாக, உறவு முறையைப்

பேண வேண்டும் என்ற நிய்யத் உங்களிடம் இருக்குமானால் நீங்கள் சென்றது இபாதத்தாகிவிடும்.

### பர்தா பேணுதல் அவசியம்

அதே போன்று ஏதேனும் விஷேசங்களுக்குச் செல்லும் போது ஆண், பெண் கலக்குமிடத்தை விட்டும் ஒதுங்கிக் கொள்ளுங்கள். எங்கே பர்தாவைப் பேண மாட்டார்கள் என்று உறுதியாக உங்களுக்குத் தெரியுமோ அங்கு செல்வதைத் தவிர்த்திடுங்கள். நிர்பந்தமாகச் சென்று விட்டாலும் நீங்கள் பர்தாவுடன் இருக்க வேண்டும். அப்பொழுது தான் இப்பெண்ணிற்கு பர்தாவின் ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற அவசியத்தை உங்கள் உறவினர்கள் தாங்களாகவே உணருவார்கள்.

சில நல்ல பெண்களின் முன் உதாரணங்களும் இருக்கின்றன. அவர்கள் தங்கள் சகோதரிகளின் நிக்காஹ்விற்குச் சென்றனர். அந்தத் திருமணத்தில் பர்தாவின் பேணுதல் இருக்கவில்லை. இதனால் இந்த பெண்கள் ஒரு வாரம் வரை வீட்டில் புர்காவுடனேயே இருந்து விட்டனர். நல்ல பெண்கள் ஷரீஅத்தின் கடமைகளை மிக அழகாக நிறைவேற்றுகின்றனர்.

ஒரு நல்ல வழிமுறை இருக்கிறது. அதையே இந்த அடியேனும் பின்பற்றி வருகிறேன். அது என்னவென்றால் ஒரு வீட்டில் மகிழ்ச்சியான நிகழ்வு நடக்க விருக்கிறது என்றால் நிகழ்ச்சி நடைபெறும் நாளன்று செல்லுவதற்கு பதிலாக ஒரு நாள் முன்பே சென்று அவர்களுக்கு அன்பளிப்பு ஒன்றைக் கொடுத்து விட்டு சிறிது நேரம் அவர்களிடம் பேசி மகிழ்ச்சியில் பங்கு கொள்ளுங்கள். பேச்சிற்கு இடையில் பர்தாவின் காரணமாக நாளைய நிகழ்வில் என்னால் கலந்து கொள்ள இயலாது. எனவே ஒரு நாள் முன்பே வந்து விட்டேன். உங்களுக்காக இன்ஷா அல்லாஹ் துஆ செய்கிறேன் என்று கூறிவிடுங்கள்.

இதே போல் ஒரு வீட்டில் துக்க நிகழ்வு நடந்து விட்டது என்றால் துக்க தினத்தன்று செல்ல வேண்டிய அவசியமில்லை. ஏனெனில் அன்றைய தினம் அங்கு பொதுவாக பர்தா பேணுதலை எதிர்பார்க்க முடியாது. மக்கள் பர்தாவின் சட்டங்களில் கவனம் செலுத்துவதே

இல்லை. எனவே துக்க நிகழ்விற்கு அடுத்த நாள் சென்று துக்கம் விசாரித்து விட்டு நேற்று பர்தா பேணுதலுடன் இருப்பது கஷ்டம் என்ற காரணத்தால் வரவில்லை என்று கூறிய பின் சில ஆறுதல் வார்த்தைகளைக் கூறி திரும்பி விடுங்கள்.

இந்த வழிமுறையைப் பின் பற்றி வந்தால் உங்களின் சொந்த பந்துக்களும் அறுந்து போகாமல் பாதுகாக்கப்படும். உங்கள் பர்தாவும் பாதுகாக்கப்படும். அதாவது நீங்கள் அடியார்களையும் சந்தோஷப் படுத்தி விடுவீர்கள். அடியார்களின் இரட்சகனையும் சந்தோஷப் படுத்தி விடுவீர்கள்.

## 8) தான தர்மங்கள் செய்யும்படி கணவனை ஆர்வமூட்ட வேண்டும்.

அல்லாஹ்வின் பாதையில் தாராளமாகச் செலவு செய்யும்படி கணவனைத் தூண்டிக் கொண்டே இருங்கள்!. ஏனெனில் ஸதகா செய்வது முஸீபத்துகளைத் தட்டி விடுகின்றது. ஸதகாவின் மூலம் இரணத்தில் - ரிஸ்கில் பரக்கத் உண்டாகிறது. ஸதகா செய்வதினால் மனிதனின் செல்வம் குறைவதில்லை என்று நபி (ஸல்) அவர்கள் சத்தியமிட்டுக் கூறியதாக ஹதீஸ்கள் தெரிவிக்கின்றன.

பாருங்கள்! நபி (ஸல்) அவர்கள் சாதாரணமாகக் கூறியிருந்தாலும் போதுமானதே! ஆனாலும். அஸ்ஸாதிகுல் அமீனான அல்லாஹ்வின் நேசத்திற்குரிய நபி (ஸல்) அவர்கள், 'ஸதகாவினால் பொருளில் குறைவு ஏற்படவே செய்யாது' என்று சத்தியமிட்டுக் கூறுகிறார்கள். எனவே அவ்வப்போது தன் கணவரை ஸதகா செய்யச் சொல்லுங்கள். அவர் ஏதாவது பிரச்சனையில் சிக்கித் தவிக்கும் போது அல்லாஹ்வின் பாதையில் ஸதகா செய்யும்படி ஆலோசனை வழங்குங்கள்.

ஸதகா என்றால், இருக்கும் அனைத்தையும் அள்ளிக் கொடுத்து முடித்து விட வேண்டும் என்பதல்ல. மாறாக நீங்கள் ஒரு பைசா செலவு செய்தாலும் அது அல்லாஹ்விடம் ஸதகாவாகவே கருதப்படும். அல்லாஹ தஆலா பொருள்களைப் பார்ப்பதில்லை. மாறாக நிய்யத்

எந்தளவு தூய்மையாக இருக்கின்றது என்றே பார்ப்பான். எனவே நீங்களும் கணவனின் அனுமதியுடன் அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்து பழகுங்கள். தங்களின் குழந்தைகளின் கையில் கொடுத்தும் ஸதகா செய்யப் பழக்குங்கள்.

ஓர் ஏழைப் பெண் யாசகம் கேட்டு வந்து விட்டாள்; நீங்களும் அவளுக்கு தர்மம் செய்ய நினைக்கிறீர்கள் என்றால் உங்களின் பிள்ளையின் கையில் கொடுத்து 'அந்த அம்மாவிடம் கொடுத்து விட்டு வாருங்கள்!' என்று சொல்லி அனுப்புங்கள். இதன் மூலம் தானும் அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்ய வேண்டும் என்ற பாடம் குழந்தைக்குக் கிடைக்கும்.

யதார்த்தத்தில் அல்லாஹ் எவ்வளவு நமக்கு வழங்கி உள்ளானோ அதைக் கவனிக்கும் பொழுது நாம் அவனின் பாதையில் மிகக் குறைவாகவே செலவு செய்கிறோம். "இன்னும் அவர்கள் எத்தகையோர் என்றால் அவர்களது பொருள்களில் யாசிப்பவருக்கும் (யாசிக்க வெட்கப்பட்டு) ஒதுங்கிக் கொள்பவருக்கும் பங்குண்டு" (அல்குர்ஆன் 51 : 19) என்று அல்லாஹு தஆலா கூறுகின்றான். ஆக நாம் கொடுப்பது மிகக் குறைவுதான். மாறாக ஒன்றுமே இல்லை என்று சொல்வதே பொருத்தமானது.

### தபால்காரர்

ஹதீஸில் வருகின்றது. அல்லாஹு தஆலா மனிதர்களில் சிலருக்கு அவர்களின் தேவைக்கும் அதிகமாக செல்வத்தை வழங்கியிருப்பது அவர்கள் ஏழைகள், விதவைகள், அநாதைகளுக்குச் செலவு செய்ய வேண்டும் என்பதற்காகத்தான். இது அவர்களுடைய ரிஸ்க் ஆகும். அல்லாஹ் உங்களைத் தபால்காரனாக்கி அவர்களிடம் கொண்டு போய்ச் சேர்க்கும் வேலையை உங்களிடம் வாங்கிக் கொள்கிறான்.

ஓர் அடியான் ஏழைகளுக்குச் செலவு செய்து கொண்டே இருந்தால் அல்லாஹு தஆலா அவ்வடியானுக்குத் தேவையை விட அதிகமான செல்வத்தை வழங்கிக் கொண்டே இருப்பான். அவன்

செலவு செய்வதை நிறுத்தும் பொழுது அல்லாஹ்வும் அவனுக்குக் கொடுப்பதை நிறுத்தி விடுகின்றான். அந்தத் தபால்காரர் வேலைக்கு வேறொருவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான்.

இதனால்தான், பில்லியன், டிரில்லியன் கணக்கில் வியாபாரம் செய்து கொண்டிருந்த தொழிலதிபர்கள் பலர், பொருளாதார நெருக்கடியின் காரணமாக முழு செல்வத்தையும் இழந்து ஒரு நேர உணவிற்குக் கூட கஷ்டப்படும் காட்சிகளைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்.

பிறகு வந்து 'ஹஸ்ரத்! என்னவென்றே தெரியவில்லை! இலட்சக்கணக்கில் மக்களிடம் எனக்கு சேர வேண்டியதை வாங்க வேண்டிய நிலை இருந்தது. ஆனால் இப்போது இலட்சக்கணக்கில் நான் வாங்கிய கடனை திரும்பக் கொடுக்க வேண்டியுள்ளது' என்று புலம்புகின்றனர். காரணம் என்னவெனில், அந்தப் பொருள்கள் அனைத்தும் அவர்களுக்குச் சொந்தமானதாக இருக்கவில்லை. மாறாக அவர்கள் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருந்து அடியார்களுக்குப் பகிர்ந்து கொடுக்கவே அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்திருந்தான். அவர்கள் அந்தக் கடமையைச் சரியாக நிறைவேற்றாத பொழுது அல்லாஹ் அவர்களுக்குக் கொடுப்பதை நிறுத்திக் கொண்டான். இப்பொழுது அவர்களது பங்கை மட்டும் அளந்து கொடுக்கிறான். எனவே அல்லாஹு தஆலா யாருக்காவது தேவையை விட அதிகம் கொடுத்தால் அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்ய அதிகம் முயற்சிக்க வேண்டும். அதற்குத் தேவையான தயாளத் தன்மையை உள்ளத்தில் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

## தயாளத் தன்மையின் மதிப்பு

உள்ளத்தின் இந்த தயாளத் தன்மை அல்லாஹு தஆலாவிற்கு எந்தளவு பிரியமானது என்றால் நபி (ஸல்) அவர்களிடம் கொடைவள்ளல் ஹாத்திம் தாயி உடைய மகள் கைது செய்யப்பட்ட நிலையில் கொண்டு வரப்பட்டார். அப்பொழுது அல்லாஹ்வின் நேசத்திற்குரிய நபி (ஸல்) அவர்களிடம், "இவர்களின் தந்தை மிகப்பெரிய வள்ளலாக இருந்தார்" என்று கூறப்பட்டது.

இதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் அப்பெண்ணை விடுதலை செய்து விட்டார்கள். அப்பொழுது அவள், "நான் தனியாக எப்படிச் செல்வேன்?" என்று கூறினாள். உடனே நபி (ஸல்) அவர்கள், அந்தப் பெண்ணை பத்திரமாக அவளின் வீட்டில் விட்டு விட்டு வரும்படி இரு ஸஹாபிகளை உடன் அனுப்பினார்கள்.

அதற்கு அப்பெண், "எனது கோத்திரத்தைச் சார்ந்த பலர் இங்கு கைதிகளாக இருக்கும் பொழுது நான் மட்டும் விடுதலையாகி தனியாகச் செல்ல வெட்கப்படுகின்றேன்" என்றாள். அதைக் கேட்டு நபி (ஸல்) அவர்கள் அவளது கோத்திரத்தைச் சார்ந்த அனைவருக்கும் மன்னிப்பளித்து விடுதலை செய்தார்கள். ஆக, தயாளத் தன்மை அல்லாஹ்விற்கும் அவனது பிரியமான தூதருக்கும் இந்தளவு பிரியமான பண்பாகும்.

## 9) வீட்டில் தொழுகைக்காக ஓர் இடத்தை ஒதுக்கிக் கொள்ளுங்கள்!

வீட்டில் ஓர் இடத்தை தொழுகைக்காக ஒதுக்கிக் கொள்ளுங்கள். அதையே உங்களுக்குரிய மஸ்ஜித் என்று கருதுங்கள்! வீடு பெரியதாக இருந்தால் ஓர் அறையை மஸ்ஜிதாக்கிக் கொள்ளலாம். அல்லது அறையின் ஒரு மூலையில் போர்வையை விரித்து முஸல்லா விரித்து வையுங்கள். அங்கே தஸ்பீஹ், குர்ஆன் ஷரீஃப் மற்றும் தொழுகைக்கான மக்கன்னாவும் இருக்க வேண்டும். இதனால் யாராவது தொழ வேண்டும் என்று நினைத்தால் சுலபமாக சரியான பர்தா முறைப்படி தொழுது முடிக்க முடியும்.

மேலும் அந்த இடத்தில் அமரும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்! அந்த இடத்தில் உங்கள் மனம் லயிக்க வேண்டும்! ஓய்வு நேரங்களில் நாற்காலியின் மீது அமர்ந்து ஸ்கிரீன் காட்சிகளைப் பார்ப்பதற்குப் பதிலாக முஸல்லாவின் மீது அமரும் பழக்கம் உண்டாகிவிட வேண்டும். கணவன் வேலைக்குச் சென்ற பிறகு தங்கள் வேலைகளை முடித்து விட்டு ளுஹா தொழுகைக்காக முஸல்லாவிற்கு வருவது ஸஹாபிப் பெண்களின் பழக்கமாக இருந்தது. வெளியில்

சென்றால் கால்கள் சுடுமளவு சூரியன் உயர்ந்து உச்சத்தை அடைவதற்கு முன்பு வரை தொழும் தொழுகைக்கு ளுஹா தொழுகை என்று பெயர். அல்லாஹு தஆலா இந்த ளுஹா தொழுகையில் ரிஸ்கின் பரக்கத்தை வைத்துள்ளான் என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

கணவர் வேலைக்குச் சென்று விட்டார். இப்பொழுது நீங்கள் ளுஹா தொழுது விட்டு துஆ கேட்க வேண்டும். 'என் எஜமானனே! என் கணவர் சம்பாதிப்பதற்காக வீட்டை விட்டு வெளியே சென்றுள்ளார். நான் உன் அடிமை. உன் முன் கையேந்திக் கேட்கிறேன். என் கணவரின் உழைப்பை ஏற்று, அதற்குப் பகரமாக எங்களுக்கு ஹலாலான ரிஸ்கை வழங்குவாயாக என்று துஆ செய்து பாருங்கள். ஒரு பக்கம் கணவரின் உழைப்பு, மறுபக்கம் மனைவியின் துஆ. இதன் பரக்கத்தால் அல்லாஹ் உங்களுக்கு ஹலாலான பரிசுத்தமான ரிஸ்கை வழங்குவான்.

ஆனால் இன்று, ஸஹாபிப் பெண்மணிகளின் இந்தப் பண்பு எத்தனை பெண்களிடம் இருக்கிறது? கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்!

இன்று எத்தனை பெண்கள் ளுஹா தொழுது விட்டு கணவரின் சம்பாத்தியத்தில் பரக்கத் ஏற்பட துஆ செய்கின்றனர்? அமல்கள் செய்யவில்லையென்றால் அதன் விளைவாக வீடுகளில் பரக்கத்தின்மை நிலவும். அதன் காரணமாக முதலில் இரணமில்லாது போய்விடும் அல்லது இரணமிருந்தும் வீட்டினுள் பிரச்சனைகள் வரக் காரணமாகி விடும்.

## 10) போனில் சுருக்கமாகப் பேசுங்கள்!

போனில் சுருக்கமாக பேசக் கற்றுக் கொள்ளுங்கள்! இது மனிதனின் பழக்கத்தைப் பொருத்துதான் உருவாகின்றது. பெண்களில் பலர் போனை எடுத்து விட்டால்.... 'சரி! நீ இப்ப என்ன சமைக்கிறாய்?' என்ற கேள்வியில் ஆரம்பித்து பிறகு அதற்கு விமர்சனங்கள் செய்து... ஆமாம்! நானும் இதே தான் சமைக்கிறேன் என்று வளவளவெனத் தேவையில்லாததை பேசிப் பேசியே அரை மணி நேரத்தை வீணடித்து விடுகின்றனர். இப்படி வாழ்வின் மதிப்பு மிக்க நேரத்தைத் தேவையில்லாமல் வீணான பேச்சில் கழிக்கின்றோமே என்ற உணர்வும்

இருப்பதில்லை! எனவே தேவையானதை மட்டும் பேசிப் பழகுங்கள்! இதில் பல பயன்கள் உள்ளன.

1) நேரம் பாதுகாக்கப் படுகின்றது.

2) பல முஸீபத்துகளிலிருந்து பாதுகாப்பு கிடைக்கிறது.

3) புறம் பேசுவதிலிருந்து பாதுகாப்பு கிடைக்கிறது.

ஏனெனில் தன் வீட்டு பருப்பு சால்னாவைப் பற்றி பேசியவள் தனது மாமியாரைப் பற்றியும் புறம் பேசி முடிப்பாள். உங்களுக்கே தெரியாமல் அந்த புறத்தில் நீங்களும் கூட்டாசி விடுவீர்கள். எனவே போனில் தேவையில்லாமல் பேசுவதைத் தவிர்த்துவிடுங்கள்.

மறுமுனையில் யாராவது அந்நிய ஆண் குரல் கேட்டால் உங்கள் குரலை சற்று கறாராக்கிக் கொள்ளுங்கள். அப்பொழுது அவர் இரண்டு வார்த்தை பேச நினைத்த இடத்தில் ஒரு வார்த்தையோடு முற்றுப்புள்ளி வைப்பார்.

"நீங்கள் அந்நிய ஆண்களுடன் பேச வேண்டிய நிலை ஏற்பட்டால் உங்கள் குரலில் நளினம் காட்டாதீர்கள்" (அல்குர்ஆன் - 33 : 32) என்று அல்லாஹ் தஆலா கட்டளையிடுகின்றான். ஆனால் இன்று அந்நிய ஆண்களுடன் பேசும்பொழுது கரும்பாக இனிக்க இனிக்க பேசுகின்றனர். ஷரீஅத் இதை ஹராமாக்கி இருக்கிறதே என்ற உணர்வு கூட இருப்பதில்லை. எனவே அந்நிய ஆண்களுடன் பேசும் போது கடுமையான தொனியில் பேசவேண்டும். ஏனெனில் எப்பொழுதும் பேச்சின் மூலம்தான் பேச்சு வளரும் என்பது ஓர் அடிப்படை விதியாகும்.

குறிப்பாக இளம் பெண்கள், "பேச்சின் மூலம்தான் பேச்சு வளரும்" என்ற இந்த அடிப்படையை நன்றாக நினைவில் கொள்ளுங்கள்! இது மிகவும் பலன் தரும். இதன் கருத்தையும் புரிந்திருப்பீர்கள். ஆமாம்! முதலில் மனிதன் பேசுவான். பேச்சிற்குப் பின் சந்திப்பின் வாசல் திறக்கும். இது தான் நியதி! இதற்கு குர்ஆனிலும் ஆதாரம் இருக்கின்றது. கிட்டத்தட்ட 1,24,000 நபிமார்கள் வந்திருக்கிறார்கள். ஆனால் ஹஸ்ரத் மூஸா (அலை) அவர்களைத் தவிர மற்ற எவரும் அல்லாஹ்வைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலை வெளிப்படுத்தவில்லை.

மூஸா (அலை) அவர்கள் மட்டும் "என் ரப்பே! நான் உன்னைக் காண்பதற்காக (உன்னை) நீ எனக்கு காட்டுவாயாக" (அல்குர்ஆன்-7: 143) என்று கூறினார்கள். குர்ஆன் விரிவுரையாளர்கள் எழுதுகிறார்கள், 1,24,000 நபிமார்களில் ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் மட்டும் அல்லாஹ்வை ஏன் பார்க்க விரும்புவதாகக் கூறினார்கள் எனில், அவர்கள் கலீமுல்லாஹ் - அல்லாஹ்வுடன் பேசக்கூடியவர்களாக இருந்தார்கள். ஒருவர் யாருடனாவது பேச ஆரம்பித்தால் அடுத்து அவரைப் பார்க்க வேண்டுமென ஆசை கொள்வார். எனவே நீங்கள் போனில் அந்நியருடன் பேச ஆரம்பித்தால் அடுத்த அடி பாவத்தின் பக்கமாகத்தான் இருக்கும். எனவே முதல் படியிலேயே நீங்கள் உங்களை கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள்!

எந்தப் பாவத்தை மனிதன் சிறியதாகக் கருதுகிறானோ அது பெரிய பாவத்திற்குத் தூண்டிலாக அமையும். எனவே, 'நான் என் மச்சானுடன் போனில் தானே பேசுகிறேன்' என்று ஓர் இளம்பெண் சாதாரணமாக நினைத்தால் மனிதன் சிறியதாக நினைக்கும் பாவமே பெரிய பாவத்தின் பக்கம் இழுத்துச் செல்லும் என்ற நியதியை நினைவில் கொள்ளட்டும்.

## 11) குறிப்பேடு (நோட்புக்) அவசியம்

வீட்டில் உங்களுக்கென ஒரு நோட் புக் வைத்து முக்கியமான விஷயங்களை அதில் குறித்து வைக்கப் பழகுங்கள். பெண்களிடம் இந்தப் பழக்கத்தைப் பெரும்பாலும் காண முடிவதில்லை. சில நல்ல பெண்களிடம் மட்டும் இந்த பழக்கம் இருக்கிறது. குறிப்பேடு வைக்கப் பழகாததால் கணவனிடம் முக்கியமான பல விஷயங்கள் கூற வேண்டியதிருக்கும். ஆனால் அந்த நேரத்தில் ஞாபகத்திற்கு வராமல் போய் விடும். அதே போல் கணவன் கூறிச் சென்ற பல வேலைகள் முடிக்க வேண்டி இருக்க, அவை மறந்து போய் வீட்டில் பல முஸீபத்துகள் ஏற்படக் காரணமாகிவிடும்.

உங்களின் நினைவாற்றலின் மீது மட்டும் நம்பிக்கை வைக்காதீர்! ஏனெனில் பொதுவாக குழந்தைகள் உருவான பின்பு வீட்டுப் பெண்களுக்கு ஞாபக சக்தி குறைய ஆரம்பித்து விடும். பல

விஷயங்களை சீக்கிரம் மறந்து விடுவீர்கள்! வீட்டில் டைரி ஒன்று இருந்தால் அதில் கணவன் சொல்லிச் சென்ற வேலைகள், மற்றவர்கள் சொன்ன விஷயங்கள், பிறரிடம் கூற வேண்டிய காரியங்கள் அனைத்தையும் குறித்துக் கொள்ளலாம். ஆக தினசரி ஒரு பக்கம் ஒதுக்கி அதில் நீங்கள் செய்ய வேண்டிய வேலைகள், சொல்ல வேண்டிய விஷயங்களைக் குறித்துக் கொள்ளுங்கள். பிறகு மாலையில் நான் அனைத்து வேலைகளையும் முடித்து விட்டேனா? இல்லையா? என்று ஒரு முறை பார்த்துக் கொள்ளுங்கள்.

நோட்புக் எழுதும் முறையை நீங்கள் கையாள ஆரம்பித்த உடனேயே, உங்களது வாழ்வில் நேரம் தவறாமை போன்ற ஒழுக்கங்கள் உருவாகுவதை நீங்கள் உணர்வீர்கள். உங்கள் வாழ்க்கை நீங்கள் அறியாமலேயே முறைப்படுத்தப்பட்டதாக ஆகிவிடும். பிறகு நீங்கள் நேரத்தைப் பாதுகாப்பீர்கள். இன்று இவ்வளவு வேலைகளைச் செய்து முடிக்க வேண்டும் என்ற உறுதி மனதில் வந்து விட்டால் யாருடைய போனாவது வரும் சமயத்தில் வீட்டு சமையலைப் பற்றி பேசிக் கொண்டிருக்கமாட்டீர்கள். ஏனெனில் என்னுடைய நேரம் பொன்னானது என்ற எண்ணம் உங்களுக்குப் புரிந்து விடும்.

இன்று அவசர வேலைகளின் காரணமாக முக்கிய வேலைகளின் பக்கம் பெண்கள் கவனம் செலுத்துவதில்லை. உள்ளத்தின் காதைத் திறந்து கவனமாகக் கேளுங்கள்! வாழ்க்கையில் சரியான திட்டமிடல், நிர்வாக முறை இல்லாத காரணத்தால் இன்றைய தாய்மார்கள் முக்கியமான காரியங்களுக்காகச் சந்தர்ப்பமே கிடைக்காத அளவு அவசர வேலைகளில் சிக்கிக் கொள்கின்றனர். சதாவும் காலில் சுடுதண்ணீரை ஊற்றிக் கொண்டு சுற்றுகின்றனர். சிறிது அவகாசம் கிடைத்தாலும் 'சரி! இந்த வேலை செய்ய வேண்டும். அந்த வேலை செய்ய வேண்டும். நாளை நிகழ்ச்சி வேறு இருக்கிறதே...! என்று எப்பொழுதும் அவசரம் தான். இப்படிப் பறக்க வேண்டிய தேவை இல்லையே! மாறாக திட்டமிட்டு வாழக் கற்றுக் கொள்ளுங்கள்!

ஒரு மனிதன் சரியாகத் திட்டமிட்டுவிட்டால் அவனது பாதி வேலை முடிந்து விட்டது என்று அர்த்தம். ஆக, இந்தக் குறிப்பேடை

எடுத்துக் கொள்வது. நேரத்தை முறைப்படுத்திப் பாதுகாத்துத் தன் வேலைகளை அதில் குறித்து வைப்பது உங்களுக்குப் பெரும் பயனைத் தரும். ஹஸ்ரத் அவர்கள் நமக்கு நல்ல, பயனுள்ள விஷயத்தைக் கற்றுத் தந்துள்ளார்கள் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். ஏனெனில் இந்தப் பழக்கம் இல்லாததின் காரணமாக பிரச்சனைகள் ஏற்படுகின்றன.

மனைவி கணவனிடம் ஒரு வேலையைச் சொல்ல அவளும் அவரும் அதை மறந்து விட... பல நாட்களுக்குப் பிறகு அந்த வேலை ஞாபகத்திற்கு வரும்போது பிரச்சனைகளும் சேர்ந்துதான் வரும். எனவே தான் நோட்டுக் வைத்துக் கொள்வது இன்றைய நிலைமைகளை முன் வைத்து பெண்களுக்குப் பெரும் பலன் தருவதாக அமையும்.

### 12) அத்தியாவசியப் பொருட்கள் கைவசம் இருக்க வேண்டும்.

அதே போல், வீட்டில் திடீரென சில பொருட்களின் தேவை ஏற்படும்... அவற்றை அதற்குரிய இடத்தில் எப்பொழுதும் தயாராக வைத்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் குழப்பத்தைத் தவிர்க்க முடியும்.

#### முதலுதவிப் பெட்டி

உதாரணமாக எல்லாப் பெண்களும் தங்களின் வீடுகளில் சிறியதொரு முதலுதவிப் பெட்டி (First Aid Box) ஐ வைத்திருப்பது அவசியம். ஆனால் பெண்கள் இவ்விஷயத்தில் கவனம் செலுத்துவதே இல்லை. இதனால் சிறிய சிறிய காரியங்களுக்காக டாக்டர்களிடம் ஓட வேண்டிய நிர்பந்தம் ஏற்படுகிறது. குழந்தைக்குச் சிறு காயம் ஏற்பட்டு விட்டாலும் டாக்டரிடம் தூக்கிச் செல்லுங்கள் என்று புலம்புகின்றனர். குழந்தையுடன் தாயும் டாக்டரிடம் செல்வாள். அங்கே சென்றால் டாக்டரிடம் பேச வேண்டிய நிர்பந்தம் ஏற்படும். முகத்தைத் திறக்க வேண்டிய நிலை உண்டாகும். சில சமயம் பேச்சினால் பேச்சு வளரும். எனவே இது போன்ற ஷைத்தான்களின் வாசல்களை அடைப்பதற்கு இலேசான வழி, அன்றாடம் தேவைப்படும் மருந்துகள் மற்றும் அத்தியாவசியப் பொருட்களை வீட்டில் கைவசம் வைத்துக் கொள்வதுதான்.

தலைவலி, காய்ச்சல் மாத்திரை போன்ற மருந்துகளை மிக சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். எனவே இவற்றை ஒன்று சேர்த்து வீட்டில் பெண்கள் தங்களுக்கென்று “முதலுதவிப் பெட்டி” ஒன்றை தயாரித்துக் கொள்ள வேண்டும்.

உதாரணமாக, குழந்தைக்கு ஒரு காயம் ஏற்பட்டுவிட்டது. அல்லது உங்கள் கையிலேயே ஒரு தீக்காயம் ஏற்பட்டு விட்டது (அல்லாஹ் பாதுகாப்பானாக!) அச்சமயம் வீட்டிலேயே மருந்து இருந்தது. உடனே அக்காயத்தின் மீதோ, தீப்பட்ட இடத்திலோ தடவி விட்டீர்கள் என்றால் அக்காயம் பட்டுப் போன பிறகு அந்த இடத்தில் காயத்தின் வடுவே இருக்காது.

ஆனால் நடப்பதென்ன...? ஒரு பெண்ணுக்குத் தீக்காயம் ஏற்பட்டு விட்டது. கணவனுடன் தான் டாக்டரிடம் செல்ல வேண்டும். அவரோ மாலையில் தான் வீடு திரும்புவார். அதுவரை நான்கு, ஐந்து மணி நேரம் இப்படியே கழிந்து விடும்பொழுது டாக்டரிடம் செல்வதற்கு முன்பே பெரிய நஷ்டம் ஏற்பட்டு விடலாம். பிறகு காயத்தின் தழும்புகளும் மறையாது.

## அந்நிய ஆண்களின் குழப்பங்களிலிருந்து பாதுகாப்பு

எனவே வீட்டில் முதலுதவிப் பெட்டிக்கு ஏற்பாடு செய்யுங்கள். இது பெண்களுக்குத் தீனுடைய அடிப்படையிலும் துன்யாவின் அடிப்படையிலும் பெரும் பயனைத் தரும். அதே போல் பெண்கள் முடிந்தவரை ஆண் டாக்டரிடம் செல்வதைத் தவிர்க்க வேண்டும். அல்லாஹ் நம் பெண்களை அந்நிய ஆண்களின் குழப்பங்களிலிருந்து பாதுகாப்பானாக!

அதே போன்று சாவிகளை வைப்பதற்கென்று ஓர் இடத்தைக் குறித்து வையுங்கள். எங்காவது செல்ல வேண்டிய நேரத்தில் பெரும்பாலும் சாவிகள் கிடைப்பதில்லை. சாவிகளை நீங்கள் விழுந்து விழுந்து தேடினாலும் சாவி கிடைக்கவில்லை என்றால் எங்கே சாவியை வைத்தாய் என்று உங்கள் கணவர் உங்களைத் திட்ட அங்கே வீடே போர்க்களமாக மாறிவிடும். பிறகு, என்னைத் திட்டிவிட்டாரே என்று புலம்பிக் கொண்டிருப்பீர்கள். எனவே சாவிகளைப் பாதுகாப்பாக குறித்த இடத்தில் வைத்துப் பழகுங்கள்.

அதே போன்று கத்தி போன்ற பொருட்களும் அதிகம் தேவைப்படும். அதையும் குறிப்பிட்ட இடத்தில் வைக்க வேண்டும். காய்கறிகளுக்கு, பழங்களுக்கு என்று தனித்தனியே கத்திகள் இருக்க வேண்டும். ஏனெனில் ஒரே கத்திதான் இருக்கிறது என்றால் வெங்காயம் நறுக்கிய கத்தியால் ஆப்பிளை வெட்டும் போது வெங்காயத்தின் வாசமும் சுவையும் கலந்து ஆப்பிளின் சுவையைக் கெடுத்து விடும். இதனால் வீட்டின் நிலையும் கெட்டுப் போய்விடும்.

அதேபோன்று நகைப் பெட்டி போன்ற முக்கியமான பொருட்களையும் முறைப்படுத்தி வைக்க வேண்டும். உங்களுக்குத் தேவைப்படும் போது அது தயாராக இருக்க வேண்டும். உங்கள் வாழ்வின் பல பிரச்சனைகள் இத்துடன் தான் பின்னிப் பிணைந்துள்ளன. நீங்கள் கொஞ்சம் கவனம் செலுத்தினால் இப்பொருட்களைத் தேடும்போது ஏற்படும் சண்டைகளுக்கு முற்றுப் புள்ளி வைத்து விடலாம். பிறகு அவற்றைக் காரணமாக வைத்து ஷைத்தான் வீட்டுச் சூழ்நிலையைக் களங்கப்படுத்துவதை விட்டும் அல்லாஹ் பாதுகாத்துவிடுவான்.

## 13) கணவனின் பார்வையில் உங்களை தாழ்த்தும் செயல் வேண்டாம்

அடுத்த முக்கியமான விஷயம், கணவனின் பார்வையில் தன்னைத் தாழ்த்தி விடும் செயல்களிலிருந்து மனைவி தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். அது பணம் சார்ந்த அல்லது குணம் சார்ந்த எந்த செயலாக இருந்தாலும் சரியே! ஏனெனில் கணவனையே தன் உலகமாக ஆக்கிக் கொண்டு அவனது மனதைக் கவர்ந்தவள்தான் நல்ல மனைவியாவாள். கணவன் அவளை விரும்ப வில்லை என்றால் அவளது வாழ்க்கைக்கு அர்த்தமே இல்லை. கணவனின் அன்புதான் அவளது வாழ்க்கைக்கு அச்சாணி. ஏனெனில் கணவனின் இடத்தை வேறு யாரும் நிரப்ப முடியாது. எனவே முழு உலகமும் ஒரு பக்கம் என்றால் கணவனின் அன்பு மறுபக்கம். எனவே ஏதாவது ஒரு காரியத்தைச் செய்து கணவனின் பார்வையில் தாழ்ந்து விடாதீர்கள். ஏனெனில் இவ்விஷயத்தில் விழுந்து விட்ட பிறகு ஒருக்காலும் பழைய நிலையை அடையவே முடியாது.

### யதார்த்தமான வாழ்க்கை வாழ வேண்டும்

மனைவி கணவனின் குணத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் வீட்டைச் சுவனப் பூங்காவனமாக்க முடியும். அவள் தன் கணவனுக்கு முன்னால் யதார்த்தமான வாழ்க்கை வாழ வேண்டும். மூடி மறைப்பதும் மாற்றிப் பேசுவதும் பொய் சொல்வதின் கிளைகள்தான். கணவனுக்கு முன்னால் மனைவி பொய் சொல்லிப் பழகிவிட்டால் அதன் பீடை வாழ்க்கை முழுவதையும் பாதிக்கும். (உண்மையைச் சொல்வதால் ஏற்படும் சில) கஷ்டங்களைச் சகித்துக் கொள்வது பொய்யின் இழிவைச் சுமப்பதை விட மேலானது. நினைவில் கொள்ளுங்கள். மனிதன் தன் தீய செயல்களை மறைப்பதற்குச் செய்யும் முயற்சியில் பாதியை மேற்கொண்டால் போதும் அத்தீமையைக் களைந்து விடலாம்.

எனவே உங்கள் கணவனின் உள்ளத்தில் உங்களைப்பற்றிய சந்தேகத்தை ஏற்படுத்தி விடக்கூடிய செயல்களை எப்போதும் செய்து விடாதீர்கள்! இவள் பொய் சொல்கிறாள்; பணத்தை மறைத்து வைக்கிறாள்; நான் யாரிடம் அவள் பேசுவதை விரும்பவில்லையோ அவர்களிடம் பேசுகிறாள் என்பது போன்ற சந்தேகங்கள் கணவனின் உள்ளத்தில் தோன்ற இடம் அளித்து விடாதீர்கள்! ஏனெனில் ஓர் உள்ளத்தில் சந்தேகம் குடிகொண்டு விட்டால் அங்கிருந்து அன்பு விடை பெற்று விடும்.

## 14) பிள்ளைகளின் விஷயத்தில் கணவனிடம் ஆலோசனை செய்யுங்கள்!

பிள்ளைகளின் விஷயத்தில் கணவனுடன் ஆலோசனை செய்து வர வேண்டும். பகலில் அவர்களின் நடவடிக்கையில் எதைக் குறித்து வைத்தாலும் இரவில் கணவனிடம் ரிபோர்ட் கொடுக்க வேண்டும்.

ஏனெனில் "முன்பே ஏன் என்னிடம் சொல்லவில்லை" என்று கணவன் கேட்டு விடக்கூடாதல்லவா? பிறகு கணவனுடன் ஆலோசனை செய்து முறையாக பிள்ளைகளைத் தர்பியத் செய்து வளர்க்க வேண்டும்.

இருவரின் ஆலோசனையும் சங்கமிக்கும் போது அல்லாஹ் அக்குழந்தைகளுக்கு நல்ல தர்பியத்தை நல்கிடுவான் ; முஸீபத்துகளை விட்டும் அவர்களைக் காத்திடுவான்.

## 15) கணவனின் தேவைகளை பூர்த்தி செய்வதில் தயக்கம் காட்டக் கூடாது

கணவனின் தேவைகளைப் பூர்த்தி செய்யும்போது ஏற்படும் சிரமங்களைப் பொருட்படுத்தக் கூடாது. "ஒரு பெண் வாகனத்தின் மீது அமர்ந்திருக்கும் போது அவளது கணவன் தன் தேவைக்காக அவளை அழைத்தான் என்றால் அவள் வாகனத்திலிருந்து இறங்கி வந்து கணவனின் தேவையைப் பூர்த்தி செய்து விட்டு வாகனத்தில் ஏறிக் கொள்ளட்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (இப்னு மாஜா) இந்த ஹதீஸ் மூலம் நபி (ஸல்) அவர்கள், கணவனின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் காரியங்களைத் தள்ளிப் போடாதீர்! அதனால் உங்களுக்கு ஏற்படும் சில சிரமங்களைப் பெரிது படுத்தாதீர்கள் என்று மனைவிமார்களுக்குக் கட்டளையிடுகிறார்கள். ஏனெனில் இது நன்மைக்குரிய செயல். பெண்களின் பொறுப்பு, இதற்கு அல்லாஹ்விடம் நற்கூலியுண்டு.

கியாமத் நெருங்குவதின் அடையாளங்களில் ஒன்று, "பெண்கள் ஆரோக்கியமாக இருந்தும் கணவனின் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் தயக்கம் காட்டுவார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இன்று இந்தக் குறைபாடுகள் பரவலாகக் காணப்படுகின்றன. இது உண்மையிலேயே கியாமத்தின் அடையாளம்தான். பெண்கள் நல்ல ஆரோக்கியமாக இருக்கிறார்கள். எனினும் கணவனுக்குத் தன் மதிப்பைப் புரிய வைக்க வேண்டும் என்பதற்காக அவன் அழைக்கும் போது தட்டிக் கழிக்கிறார்கள். இதனால் கணவன் வேறு பாதையைத் தேட ஆரம்பிக்கிறான். ஒருவனுக்குச் சாப்பிட ஹலாலான உணவு கிடைக்கவில்லை என்றால் ஹராமின் பக்கம் திரும்பத்தானே செய்வான்.

எனவே நல்ல மனைவி என்பவள் தன் கணவனின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் விஷயத்தில் தனக்கேற்படும் சிறிய சிரமங்களைப் பொருட்படுத்தக் கூடியவளாக இருக்க மாட்டாள். அதே நேரத்தில் ஆண்களும் மனைவிமார்களின் நிலைமையைப் புரிந்து கொள்ள வேண்டும். அவர்களைச் சிரமப்படுத்தி விடக் கூடாது. மாறாக இது

ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு அன்பைப் பரிமாறிக் கொள்ள வேண்டிய விஷயம்.

## கணவன் தான் சுவனத்தின் தலைவாசல்

கணவன் தான் மனைவியின் சுவர்க்கத்தின் தலைவாசல. "ஒரு பெண் தன் கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றிய நிலையில் அதாவது ஃபர்ளான தொழுகைகளைத் தொழுது பர்தாவைப் பேணி மற்ற கடமைகளையும் பூர்த்தி செய்து விட்டுக் கணவனையும் திருப்திப்படுத்திய நிலையில் மரணித்தால், அவள் மரணித்த உடனேயே அல்லாஹுதஆலா அவளுக்காக சுவனத்தின் கதவுகளைத் திறந்து விடுகின்றான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

கணவன்சுவனத்தின் தலைவாசல் என்று கூறப்பட்டிருப்பதின் கருத்து என்னவெனில், மனைவியின் விஷயத்தில் கணவன் திருப்தியாக இருந்தால் அவளது சுவனவாசல் திறக்கப்பட்டுள்ளது. கணவன் அவள் மீது அதிருப்தியாக இருந்தால் அவளது சுவனத்தின் கதவுகள் அடைக்கப்பட்டுள்ளன என்று ஹதீஸ் கலை வல்லுனர்கள் விளக்கம் தருகிறார்கள்

## கணவனின் அந்தஸ்து

எனவே தான் நபி (ஸல்) அவர்கள் ''அல்லாஹ் அல்லாத மற்றவருக்கு ஸஜ்தா செய்ய அனுமதி கொடுப்பதாக இருந்தால் ஒரு பெண் கணவனுக்கு ஸஜ்தா செய்ய வேண்டும் என்று நான் கட்டளையிட்டிருப்பேன்" என்று கூறினார்கள். (இப்னு மாஜா)

இந்த ஹதீஸைப் படித்த பிறகு எங்கிருந்தாவது ஹாஃபிழாக, ஆலிமாக, குர்ஆனை நன்கு ஓதும் காரியாக இருக்கும் பெண் கணவனுக்கு மாறு செய்கிறாள் என்று நாம் கேள்விப்படும் போது நமக்கு உள்ளத்தில் நடுக்கம் ஏற்படுகிறது.

இந்தப் பெண் தீனை என்ன புரிந்து வைத்திருக்கிறாள்? மேற்கூறிய இந்த ஹதீஸில் கூட அல்லாஹ் அல்லாத மற்றவருக்கு ஸஜ்தா செய்ய அனுமதியிருப்பின் கணவனுக்கு மனைவி ஸஜ்தா செய்யக் கட்டளையிட்டிருப்பேன் என்று தான் நபி (ஸல்) அவர்கள்

கூறினார்களே தவிர கணவன் நல்லவனாக இருக்க வேண்டும் என்றோ கெட்டவனாக இருக்க வேண்டும் என்றோ நிபந்தனை வைக்கவில்லை. ஆக, கணவன் எப்படி இருந்தாலும் மனைவி அவனுக்குப் பணிவிடை செய்பவளாக, அவனைப் புரிந்து (மார்க்கத்திற்கு முரணில்லாத காரியங்களில்) கட்டுப்பட்டு நடப்பவளாக இருக்க வேண்டும். அதற்கு வெகுமதியாக அல்லாஹு தஆலா தன் நெருக்கத்தை வழங்குவான். எனவே கணவனுக்குப் பணிவிடை செய்வது தனக்குக் கண்ணியம் என்பதையும் அவனை மகிழ்ச்சியாக வைத்திருப்பது தன் கடமை என்பதையும் நன்றாக விளங்கிக்கொள்ளுங்கள்.

## கணவனை மகிழ்ச்சியாக வைத்திருப்பது சுலபம்

கணவனை மகிழ்ச்சியாக வைத்திருப்பது என்பது பெண்களுக்கு மிகச் சுலபமான காரியம் தான். கள்ளம், கபடம் அற்ற பெண்ணின் கணவன் அவளுடன் எப்பொழுதும் மகிழ்ச்சியாகவே இருப்பான். ஒரு பெண் கணவனின் பேச்சைக் கேட்டு நடப்பவளாக இருந்தால் கணவன் அவளது பெரும் தவறுகளைக் கூட மன்னித்து விடுவான். ஆகவே கணவனைச் சந்தோஷப்படுத்துவது நம் சுவனத்தின் கதவுகளைத் திறப்பதற்குச் சமம் கணவனை கோபமுறச் செய்வது சுவனத்தின் வாயிலை அடைப்பதற்குச் சமம்.

நமது உலமாக்களின் கிதாபுகளில், 'ஒரு கணவன் எவ்விதக் காரணமுமின்றி மனைவியின் மீது கோபப்பட்டாலும் தன் கணவனைச் சமாதானம் செய்வது அவள் மீது கடமை' என்று எழுதப்பட்டுள்ளதை நான் படித்துள்ளேன்.

நன்றாக, கவனமாகக் கேளுங்கள்! கணவன் எந்தக் காரணமும் இல்லாமல் மனைவியின் மீது கோபப்படும் போது அவனிடம் மன்றாடுவது மனைவியின் கடமை. இது ஷரீஅத்தின் கட்டளையாகும். ஆனால் இன்றைய பெண்களோ 'அவர் எனது இப்பேச்சைக் கேட்கவில்லையென்றால் நான் அவருடன் பேசவே மாட்டேன்' என்கிறார்கள். பிறகு வீடு போர்க்களமாகி விடுகிறது. நீங்கள் இவ்வளவு பிடிவாதமாக இருந்தால் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை இழந்து விடுவீர்கள். எனவே இவ்விஷயத்தில் கவனம் தேவை!.

## 16) குழப்பமான நேரத்தில் கணவனுக்கு ஆறுதல் கூறுங்கள்!

16-வது முக்கிய விஷயம், குழப்பமான சந்தர்ப்பங்களில் கணவனுக்கு ஆறுதல் கூற வேண்டும். இது ஸஹாபிப் பெண்களின் சுன்னத்தாக இருக்கிறது. நபி (ஸல்) அவர்களுக்கு முதன் முதலாக வஹீ இறங்கிய போது 'எனக்குப் போர்த்தி விடுங்கள்! எனக்குப் போர்த்தி விடுங்கள்' என்று கூறியவர்களாக வீட்டிற்கு வருகிறார்கள். அப்பொழுது அன்னை கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு ஆறுதல் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் எனக்கு பயமாக இருக்கிறது என்று கூறிய போது ``உங்களுக்கு ஒன்றும் நடக்காது. நீங்கள் உறவு முறையைப் பேணுகிறீர்கள். பிறரின் சுமையைச் சுமக்கிறீர்கள். வறியவருக்காகச் சம்பாதிக்கிறீர்கள். விருந்தினரை உபசரிக்கிறீர்கள். இவ்வளவு நற்குணங்கள் கொண்டிருக்கும் தங்களை அல்லாஹ் கைவிட்டு விடுவானா?" என்று ஆறுதல் கூறினார்கள்.

மனைவியின் இந்த வார்த்தைகள் அல்லாஹ்வின் நேச நபி (ஸல்) அவர்களுக்கு பெரும் ஆறுதலைத் தந்தன. இதே போன்று கணவனுக்கு வியாபாரத்திலோ வேறு காரியத்திலோ சிக்கல்கள் ஏற்பட்டு வீட்டிற்கு வரும் போது ஆறுதல் வார்த்தைகளைக் கூறி கணவனைத் தைரியப்படுத்துவது மனைவியின் பொறுப்பாகும். இதற்கு நேர்மாறாக எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றுவது போல் அக்குழப்பத்தை மேலும் பெரிதாக்கும் வார்த்தைகளைக் கூறக் கூடாது.

### ஒரு கோடீஸ்வரரின் தைரியமான மனைவி

எனக்கு பரிச்சயமான ஒரு பெரிய கோடீஸ்வரர் இருந்தார். அவருக்குச் சொந்தமாக ஒரு பெரிய கம்பெனி இருந்தது. இந்தியா - பாக் பிரிவினைக்கு முன்பே அவரது வேலைக்காரன் ஒருவன் அவரது இரண்டு இலட்சம் ரூபாயை எடுத்துக் கொண்டு ஓடி விட்டான். சில மாதங்களுக்குப் பிறகு வந்து அழுது மன்னிப்புக் கேட்டான். அவர் அந்த இரண்டு இலட்சத்தையும் மன்னித்து வேலையில் மறுபடியும் அமர்த்திக் கொண்டார். அவ்வளவு பெரிய மனம் கொண்ட செல்வந்தர்.

அல்லாஹ்வின் நாட்டப்படி நாடு பிரிந்த போது மனைவியின் தலையில் ஒரே ஒரு முக்காட்டுத் துணியுடன் கராச்சிக்கு வந்து சேர்ந்தார். கையில் ஒன்றும் இல்லை. அங்கே இருந்த அவரது சகோதரின் வீட்டிற்கு வந்து சேர்ந்தார்.

அவரே கூறுகிறார்... 'அந்த சமயத்தில் ஏதோ ஒரு மலை உச்சியிலிருந்து அதல பாதாளத்தில் விழுந்து விட்டவனைப்போல் பிரமித்துப் போயிருந்தேன். ஆனால் என் மனைவி மிக தைரியமாக இருந்தாள். தன்னை ஓரளவு சமாளித்துக் கொண்டு மன அழுத்தத்தில் இறுகிப் போயிருந்த எனக்குத் தைரியமூட்டி வந்தாள். "ஏன் பயப்படுகிறீர்கள்! அங்கே நமக்கு உணவு அளந்த அல்லாஹ் இங்கு தரமாட்டானா?" என்பாள். சில சமயங்களில் அனைவரும் உணவருந்திக் கொண்டிருக்கும் போது தானாக இந்தப் பேச்சை ஆரம்பித்து விட்டு "எவ்வளவு பெரிய சோதனை....! நான் மிகவும் ஆடிப் போய் விட்டேன் ....! ஆனால் என் கணவரோ கையில் பட்ட தூசியாக நினைத்து உதறி விட்டார்..!" என்று கூறுவாள்.

என் மனைவி என்னை உயர்த்திப் பேசி இவர் மில்லியன் டாலர்களை தூசியாக நினைத்துத் தட்டி விட்டு விட்டார் என்று கூறும் போது அட...! இவள் பெண்ணாயிற்றே....! இவள் பலவீனமானவள்! இவளல்லவா பயப்பட வேண்டும்? இவளே தைரியமாக இருக்கும் போது நான் பயப்படலாமா?" என்று என்னை நானே தேற்றிக் கொண்டேன். அதன் பயனாக அவளது ஆறுதல் வார்த்தைகளால் சில நாட்களிலேயே என்னைத் தைரியப் படுத்திக் கொண்டேன். பிறகு அவளது ஆலோசனையின் படி சகோதரரிடம் கடன் பெற்று ஒரு ட்ரக் வாங்கி நானே ஓட்ட ஆரம்பித்தேன். ரிஸ்க் கொடுப்பவன் அல்லாஹ் தானே! சரியாக ஐந்தே ஆண்டுகளில் நூற்றுக்கணக்கான ட்ரக்குகள் கொண்ட கம்பெனிக்கு முதலாளியானேன் என்று கூறுகிறார்.

அந்த நண்பர் இந்த சம்பவத்தைக் கூறும் பொழுது என் மனைவியின் இந்த உபகாரத்திற்கு நான் என்ன கைமாறு செய்ய முடியும்? கஷ்டமான சூழ்நிலையில் எனக்கு எப்படிப்பட்ட தைரியம் கொடுத்தாள்...! என்று நெகிழ்ந்து போனார். நல்ல மனைவி தன்

கணவரின் சிரமமான நேரத்தில் ஆறுதலாக இருந்து உதவுவாள். ஆனால் மார்க்க அறிவு இல்லாத பெண்களோ கணவனின் சிரமமான நேரத்தில் வெந்த புண்ணில் வேலை பாய்ச்சுவார்கள்.

## 17) தவறை ஒப்புக் கொள்வதே மரியாதை!

தம் தவறை ஏற்றுக் கொள்வதுதான் கண்ணியம். ஏதாவது ஒரு விஷயத்தில் இது உன் தவறுதான் என்று கணவர் கூறும் போது. "ஆம்! என் தவறுதான்" என்று ஒப்புக் கொள்ளுங்களேன். இதனால் என்ன நஷ்டம் ஏற்பட்டு விடப்போகிறது? தவறை ஏற்றுக் கொள்வதில்தான் கண்ணியமே இருக்கிறது. இது ஒன்றும் கேவலம் அல்ல. அட...! உன் கணவன் தானே...! அவனுக்கு முன்னால் 'ஆமாங்க....! தப்புதான் என்று ஒப்புக் கொள்வதால் என்னவாகி விடப் போகிறது.

அடுத்து கணவன் ஏதாவது சொன்னால் உடனே பதில் சொல்லும் பழக்கத்தையும் கைவிடுங்கள். ஏனெனில் வார்த்தைக்கு வார்த்தை பதில் சொல்லிக் கொண்டே இருக்கும் பழக்கம் இல்லறத்தை நிலைகுலையச் செய்துவிடும். அமைதியாக இருப்பதே ஒரு பதில் தான். பெண்களே! இக்கருத்தைக் கவனமாகக் கேட்டு மனதில் எழுதிக் கொள்ளுங்கள். அமைதியாக இருப்பதே ஒரு பதில்தான். பல சந்தர்ப்பங்களில் கணவனின் பேச்சைக் கேட்டு வாய் மூடி இருப்பதே கணவனின் கேள்விகளுக்குப் பதிலாக அமையும். சில சமயம் வார்த்தைகள் கூற முடியாத கருத்தை மௌனம் தெளிவாகக் கூறிவிடும். அங்கே மௌனத்தைப் புறந்தள்ளிவிட்டு வாய் திறக்க ஆரம்பித்து விட்டால் போர் முரசு கொட்டப்பட்டு விட்டது என்று விளங்கிக் கொள்ளுங்கள்.

ஒரு தம்பதிக்கிடையே அடிக்கடி சண்டை, சச்சரவு நடந்து கொண்டே இருந்தது. பெரும்பாலும் கணவன் வீட்டிற்குள் நுழைந்ததும் இது என்ன இப்படி? அது ஏன் அப்படி இருக்கிறது? என்று ஆரம்பிப்பார். மனைவி பதில் பேச ஆரம்பிப்பாள்...! கடைசியில் பிரச்சனையில் போய் முடியும். இதற்கு முற்றுப் புள்ளி வைக்க நினைத்த மனைவி ஒருஇறைநேசரிடம் சென்று ``ஹஸ்ரத்! எங்கள் வீடு எப்போதும் போர்க்களமாகவே காட்சி அளிக்கிறது. அந்நிலை மாற தாங்கள் ஒரு தாயத்து ஓதிக் கொடுங்கள்!" என்று கேட்டாள். உடனே அவரும் தண்ணீர் ஓதிக் கொடுத்து. "உன்

கணவர் வீட்டில் நுழையும் போது இந்தத் தண்ணீரை 10 நிமிடம் வாயிலேயே வைத்து விட்டு பிறகு குடித்து விடு! இன்ஷா அல்லாஹ் உன் வீட்டின் நிலை மாறி விடும்" என்று கூறி அனுப்பினார்.

கணவர் வரும் போது மனைவியின் வாயினுள் தண்ணீர் இருக்கும். அவரும் ஐந்து பத்து நிமிடங்கள் ஏதாவது பேசி விட்டு கோபம் நீங்கி சகஜ நிலைக்குத் திரும்பி விடுவார். அவ்வளவுதான் . ஓதிய தண்ணீர் வீட்டின் சண்டையைப் போக்கி அழகிய வாழ்க்கைக்கு அஸ்திவாரமிட்டது.

## 18) தன் கவலைகளை படைத்தவனிடம் மட்டுமே சொல்லுங்கள்!

தங்கள் உள்ளக் குமுறல்களை கணவனிடமும் மற்றவர்களிடமும் கொட்டுவதற்குப் பகரமாக அல்லாஹ்விடம் மட்டும் எடுத்துச் சொல்லப் பழகிக் கொள்ளுங்கள். அதாவது எப்பொழுது இபாதத் செய்ய சந்தர்ப்பம் கிடைத்தாலும் நீண்ட நேரம் துஆ செய்யப் பழகிக் கொள்ள வேண்டும்.

உங்கள் உள்ளத்தின் கவலைகளை போன் மூலம் மற்றவர்களிடமோ அல்லது கணவனிடமோ பகிர்ந்து கொள்வதற்குப் பதிலாக ரப்பிற்கு முன் உள்ளத்தைத் திறந்து வையுங்கள்! இதன் பலனாக ..

1) உங்கள் இரட்சகன் உங்கள் கவலைகளை நீக்கி விடுவான

2) உங்கள் உள்ளத்திற்கு நிம்மதியும் அமைதியும் கிடைக்கும்.

3) பிறகு சப்ரு கத்ர் எனும் விதியைப் பொருந்திக் கொள்ளும் பக்குவம் கிடைக்கும்.

என் அல்லாஹ் என்னை எந்நிலையில் வைத்தாலும் எனக்கு சந்தோஷம் தான் என்ற மனநிலை உண்டாகும். அல்லாஹ்வின் முடிவைப் பொருந்திக் கொண்டு நன்றி செலுத்த வேண்டும்.

## 19) கணவனின் குடும்பத்தாருடன் நல்ல அணுகுமுறை வேண்டும்!

கணவனின் குடும்பத்தாருடன் நன்முறையில் நடக்க வேண்டும். ஏனெனில் "தீன் என்பதே பிறர் நலம் நாடுவது தான்" அதன் அடிப்படையில் கணவனின் தாய், தந்தை, சகோதரி மற்றுமுள்ளவர்களுடன் ஷரீஅத் முறைப்படி அன்பாக, பிரியமாக வாழ வேண்டும். ஏனெனில் இதன் காரணமாக உங்களுக்கிடையே பிரச்சனைகள் தோன்றக் கூடாது.

இதனை உங்கள் பொறுப்பாக நினைத்து செயல்படுங்கள். பிறகு இதன் காரணமாக அல்லாஹ்வின் புறத்திலிருந்து எப்படிப்பட்ட பரக்கத்துகள் இறங்கும் என்பதைப் பார்ப்பீர்கள்! கணவனின் குடும்பத்தாருடன் நீங்கள் சண்டையிடுவது கணவனிடம் நேரடியாக சண்டையிடுவது என்பதின் மறுபெயர்தான்.

என்னதான் இருந்தாலும் தாய் தாய்தானே! சகோதரன் சகோதரன் தானே! சகோதரி சகோதரி தானே! எனவே நீங்கள் கூறுவதற்கு உங்கள் கணவர் தற்காலிகமாகத் தலையாட்டினாலும் உங்களை உண்மையானவர் என்று ஒப்புக் கொண்டாலும் பிறகு ஒரு நேரத்தில் உங்களது இச்செயலை தவறென்று எண்ணத்தான் செய்வார். இவள் என் குடும்பத்தாருடன் மோசமாக நடந்து கொண்டாளே என்று அவர் மனம் கூறும்.

எனவே கணவனின் குடும்பத்தாருடன் நன்முறையில் அணுக வேண்டும். ஏனெனில் அவர்கள் உங்கள் கணவனின் இரத்த பந்தங்கள். உங்கள் கணவரின் உறவினர் உங்களுக்கும் உறவினர்தான். இது நன்மைக்குரிய செயலல்லவா?

சிலசமயம் சிலருக்காக சிலரைக் கவனிக்க வேண்டும். மருமகனை விழுந்து விழுந்து கவனிக்கிறார்களே... எதற்காக? மகளுக்காக....! மனிதன் தன் மகள் வாழ வேண்டும் என்பதற்காக மருமகனின் எத்தனையோ தவறுகளைப் பொறுத்துப் போகிறான். இதே போல் மனைவியும் தன் கணவனுக்காக அவரின் உறவினர் செய்யும் தவறுகளைப் பொறுத்துப் போகவேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் தம் உம்மத்திடம் கேட்கிறார்கள்: "நான் உங்களிடம் எதையும் கேட்கவில்லை. உறவின் அடிப்படையில் என்னுடன் பிரியமாக நடந்து கொள்ளுங்கள்". (42-23) நபி (ஸல்) அவர்களே இவ்வாறு கூறுகிறார்கள் என்றால் கணவனுக்கும் இதே சட்டம்தான். மனைவியும் இதே சுன்னத்தைத்தான் பின்பற்ற வேண்டும். தன் கணவனுக்காக அவனின் உறவினர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டும்.

## 20) படைத்தவனுக்கு மாறு செய்யும் விஷயத்தில் படைப்பினங்களுக்கு வழிப்படக் கூடாது.

ஷரீஅத்தை முழுமையாகப் பின்பற்ற வேண்டும். படைத்தவனுக்கு மாறு செய்து படைப்பினங்களுக்கு வழிப்படக் கூடாது. அதாவது கணவனே அல்லாஹ்விற்கு மாறு செய்யும் படியான ஒரு காரியத்தை செய்யச் சொன்னால் அவனது பேச்சைக் கேட்கக் கூடாது. அதே சமயம் கணவனுக்கு எப்படி புரிய வைப்பது என்று ஆலிம்களிடம், இறை நேசர்களிடம் ஆலோசனை கேட்டுச் செயல்படுங்கள்! ஆனால் மார்க்கத்திற்கு புறம்பான எக்காரியத்தையும் தாய், தந்தை கூறினாலும் சரி! வேறு யார் கூறினாலும் சரி! செய்யவே கூடாது. ஷரீஅத்தை பேணும் விஷயத்தில் எதையும் பொருட்படுத்தக் கூடாது. யாருடைய மனமும் புண்படுமே என்ற கவலையும் தேவையில்லை. நீங்கள் அல்லாஹ்வைத் திருப்திப்படுத்துங்கள். அவன் மக்களின் உள்ளங்களை திருப்தியடையச் செய்வான்.

ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில், ஒரு பக்கம் கணவர் அல்லது மாமியார் மறுபக்கம் அல்லாஹ்வின் கட்டளை....! என்ன செய்வது? என்ற குழப்பமான சூழ்நிலையா? இது தொடர்பாக முஃப்திகள், ஆலிம்களிடம் ஆலோசனை செய்யுங்கள்! அவர்கள் உங்களுக்கு நடுநிலையான பாதையைக் காட்டுவார்கள். அதன் மூலம் உங்களுக்கு அந்த முஸீபத்திலிருந்து இலகுவாக விடுதலை கிடைக்கும்.

உங்கள் கணவரை ஒரு நல்ல ஷைகிடம் தொடர்பு கொள்ளச் செய்யுங்கள். உங்கள் பிள்ளைகளை, உங்கள் கணவரை, உங்கள்

குடும்பத்தாரை, உங்கள் மனதுக்குப் பிடித்த, நம்பகமான, ஒரு நல்ல இறைநேசரிடம் தொடர்பு கொள்ளச் செய்யுங்கள். இதனால் அந்த லைஷிகின் தொடர்பு உங்கள் கணவரை நல்லவராக பாவங்களை விட்டும் ஒதுங்குபவராக ஆக்கிவிடும். அத்துடன், அவர் உஙகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை அலட்சியம் செய்யும் போது அவருக்கு உங்கள் கடமைகளைப் பற்றி உபதேசம் செய்யும் ஒருவராவது உலகில் இருப்பாரல்லவா?

இவ்விஷயம் நசிந்து விட்டிருந்த பல இல்லங்களை செழிப்பாக்கி விட்டதை நாம் நம் அனுபவத்தில் பல முறை பார்த்துள்ளோம்! எனவே தீனுக்காக நீங்களும் உங்களை அர்ப்பணிக்க வேண்டும். உங்கள் கணவர், பிள்ளைகளையும் தீனோடு இணைக்க வேண்டும்.

குறிப்பாக பூர் இறை நேசருடன் ஈமானியத் தொடர்பு கொள்வதால் நீங்கள் ஷரீஅத்தின் பாதுகாப்பில் வந்து விடுவீர்கள். உங்கள் இல்லற வாழ்வின் குழப்பங்களும் காணாமல் போய் விடும்.

இந்த சில விஷயங்களை உங்களுக்கு முன்னால் சமர்ப்பித்திருக்கிறேன். இவையே முழு ஷரீஅத் அல்ல; மாறாக ஷரீஅத்தின் சில முக்கியமான அம்சங்கள் தான். இன்னும் ஏராளமான விஷயங்கள் ஷரீஅத்தில் உள்ளன. அவைகளை இறைநேசர்களிடம் கேட்டுக் கேட்டுத் தமதாக்கிக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்கும் எனக்கும் ஈருலக வெற்றிகளைத் தந்தருள்வானாக! ஆமீன் !

# கணவனின் மனதை வெல்வது எப்படி?

## ஆணுக்கு வழங்கப்பட்ட அழகிய அன்பளிப்பு

அல்லாஹுதஆலா ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்களைப் படைத்து சுவனத்துச் சுகங்களில் உலவவிட்டிருந்தான் என்றாலும் அவர்களின் உள்ளத்தில் இனம் புரியாத கலக்கம் ஒன்று ஆட்கொண்டிருந்தது. அந்த விரக்தியை, கலக்கத்தை விரட்டியடிக்க அல்லாஹுதஆலா அன்னை ஹவ்வா (அலை) அவர்களைப் படைத்தான். "லியஸ்குன இலைஹா" ஆதம் (அலை) நிம்மதி பெறவே நாம் ஹவ்வாவை படைத்தோம் என்று குர்ஆன் கூறுகிறது.

எனவே, மனைவி என்பவள் கணவனின் வாழ்க்கையில் நிம்மதிக்காகவே அல்லாஹ்வின் புறத்திலிருந்து வழங்கப்பட்ட அழகான அன்பளிப்பாக இருக்கிறாள். அவள் நல்ல குணமுள்ளவளாக இருந்தால் பாலைவனத்தைச் சோலைவனமாக்கிவிடுவாள். பாழடைந்த வீட்டை அமைதிப் பூங்காவாக்கிவிடுவாள். அவளிடம் நன்னடத்தையும் நற்குணமும் நிரம்பியிருந்தால் அவள் மணம் கமழும் மலராவாள். நபி (ஸல்) நல்லொழுக்கம் உள்ள பெண்ணை இப்படி அறிமுகம் செய்கிறார்கள். "உலகமே சிற்றின்பம்தான். அச்சிற்றின்பங்களில் மிகச் சிறந்தது, நல்லொழுக்கம் உள்ள பெண்ணாவாள்". எனவே, உலகில் மனிதனுக்கு வழங்கப்படும் மிகச்சிறந்த பரிசு நல்ல மனைவிதான்.

## சிறந்த ஆண்மகன்

இதே போல் ஆண்களில் தன் மனைவிக்குச் சிறந்தவர் யார் என்றால் எவர் அவளை நன்கு கவனிக்கிறாரோ, அவளுடன் நன்முறையில் நடந்து கொள்கிறாரோ, அவளுக்கு அன்பையும், பிரியத்தையும் வழங்கி வருவதுடன் அவளது எல்லா விதமான தேவைகளையும் நிறைவேற்றுகிறாரோ, மேலும் அவளது வாழ்வில் வசந்தம் வீசக் காரணமாகிறாரோ அவரே சிறந்த கணவர். இந்த நல்ல மனிதரைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் இப்படிக் குறிப்பிடுகிறார்கள். "உங்களில் மிகச் சிறந்தவர் தன் மனைவியிடம் சிறந்தவராக வாழ்பவர்தான்"

ஆக, மனைவியிடம் நல்ல மனிதராக இருப்பவரே சிறந்த கணவராவார். தாயிடம் நல்ல மகனாக இருப்பவரே சிறந்த மகனாவார். எனவே, ஒரு ஆண் சிறந்த மகனாக, சிறந்த சகோதரராக, சிறந்த கணவனாக, சிறந்த தந்தையாகத் திகழவேண்டும்.

இந்த நற்பேறுகளைப் பெற என்ன வேண்டும்? மனிதனுக்குள் நல்ல குணங்கள் பிறக்கவேண்டும். நல்ல பழக்கங்களைப் பழக வேண்டும். பிறரின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ள வேண்டும். பிறரின் துக்கங்களை விரட்டியடித்து, அவர்களின் உள்ளங்களில் மகிழ்ச்சியை நிரப்ப வேண்டும்.

### முழுமை பெறாத வாழ்வு

எனவே தான் திருமணமாகாத மனிதனை "மிஸ்கீன்" (அப்பாவி) என்றும் திருமணமாகாத பெண்ணை "மிஸ்கீனா" (அபலைப்பெண்) என்றும் நபி மொழி குறிப்பிடுகிறது. இதன் மூலம் இல்லற வாழ்வின் முக்கியத்துவத்தை உணர முடிகிறது. ஆமாம். திருமணத்திற்குப் பிறகுதான் வாழ்க்கையே முழுமை பெறுகிறது. ஆக, மனைவியில்லாத ஒரு ஆணின் வாழ்வும், கணவனுடன் இல்லாத ஒரு பெண்ணின் வாழ்வும் பாதி வாழ்க்கைதான் (குறைவுடைய வாழ்வுதான்) என்பதில் சந்தேகமே இல்லை. நமது மார்க்கம் இதைத்தான் போதிக்கிறது. மாற்றாரும் இதையே கொஞ்சம் மிகைப்படுத்திக் கூறுவார்கள். No Life Without Wife மனைவியின்றி அமையாது வாழ்வு என்பார்கள்.

### முஃமினான மனைவியும் காஃபிரான மனைவியும்

ஆனால் இங்கு முஃமினான, காஃபிரான மனைவிமார்களுக்கு இடையே ஒரு வேறுபாடும் இருக்கிறது. காஃபிர்களின் வட்டாரங்களில் ஒரு வழக்குச் சொல்லை அதிமாகக் கேட்கலாம். "மூன்று W களுக்கு எந்த நிலைப்பாடும் கிடையாது" என்று அவர்கள் கூறுவார்கள்.

முதல் W - Wheather - தட்ப வெப்பநிலை

தட்பவெப்ப நிலைக்கு எந்த நிலைப்பாடும் கிடையாது என்று கூறுவர். இப்பொழுதுதான் வெயிலடித்தது. உடனே மழை பொழிகிறது. இப்பொழுது இருந்த உஷ்ணம் சில வினாடிகளில் குளிராக மாறிவிட்டதே

என்பர். உண்மையிலேயே மேற்கத்திய நாடுகளில் சீதோஷ்ண நிலை இப்படித்தான் இருக்கும். எனவே காலநிலையைப்பற்றி வாய் திறக்க முடியாது என்பது அவர்களின் முன்னறிவிப்பாகும்.

இரண்டாவது W-Work (வேலை)

இப்பொழுது உங்களுக்கு எந்த வேலையும் கிடைக்கவில்லை. இன்னும் சில நாட்களில் பல வேலைகள் உங்களிடம் வந்து குவியலாம் என்று கூறுவார்கள்.

மூன்றாவது W-Wife (மனைவி)

அவள் விசயத்திலும் எதையும் நம்ப முடியாது. இன்று உன்னோடு இருப்பாள், நாளை வேறொருவனின் தோலில் கை போட்டுக் கொண்டு போய்விடுவாள் என்று கூறுவர்.

இது காஃபிரான - ஈமான் இல்லாத பெண்களின் எதார்த்த நிலை, ஆனால் முஃமினான பெண் நம்பிக்கைக்குரியவளாக இருப்பாள்

அவள் அல்லாஹ்வின் அடிமை, அவள் அல்லாஹ்வின் பெயரால் ஓர் ஒப்பந்தம் செய்திருக்கிறாள். மிக உறுதியான ஒப்பந்தம் செய்திருக்கிறாள். இறுதிமூச்சு வரை அந்த ஒப்பந்தத்தைக் கட்டிக்காப்பாள். அவள் தன் கணவனின் வாயிற்படியை விட்டுச் செல்வதை விரும்பமாட்டாள்.

## திருமணம் ஓர் உறுதியான ஒப்பந்தம்

ஆக, திருமணம் என்பது ஒரு பெண்ணை, ஓர் ஆணின் வாழ்க்கைத் துணைவியாக்கச் செய்யப்படும் உறுதியான ஒப்பந்தமாகும். இன்று முதல் நமது மகிழ்ச்சியும் ஒன்றாகிவிட வேண்டும்; நமது துக்கமும் ஒன்றாகிவிட வேண்டும்; நாம் இனி ஒரு வாகனத்தின் இரு சக்கரங்களாகி வாழ்க்கையைக் கழிக்க வேண்டும் என்று ஒப்பந்தம் செய்யப்படுகிறது.

எனவேதான், நிக்காஹ்வுடைய நேரத்தில் ஒருவன் அவளுடன் சில நாட்கள் சேர்ந்திருப்போம். பிறகு அவளைக் கழற்றி விட்டுவிடுவோம் என்று நிய்யத் செய்தால் அந்தத் திருமணமே செல்லாது என்று ஷரீஅத் சட்டம் சொல்கிறது. எனவே திருமணத்தின் நோக்கம் என்னவென்றால்

நாம் இருவரும் கணவன் மனைவியாகி வாழ்க்கையைக் கழிக்கவேண்டும். ஒருவர் மற்றவருக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைப் பொறுப்பேற்று நிறைவேற்ற வேண்டும். இப்பொழுது ஒரு மனிதன், "நான் திருமணம் செய்து கொள்கிறேன். ஆனால், அந்தப் பெண்ணுக்கு என் வாரிசுச் சொத்தில் பங்கேதும் கிடைக்காது" என்று கூறினால், அவனது இந்த நிபந்தனை ஏற்கப்படாது. ஆகவே, அவள் இவனுக்கு மனைவியாகிவிட்டால் அவள் இவனது ஒவ்வொரு பொருளிலும் பங்கு பெறுவாள்.

வீட்டில் சேர்ந்து வாழ ஒரு மனைவி, சுகம் அனுபவிக்க மற்றொருத்தி என்று ஒருவன் வாழ விரும்பினால் இது முடியவே முடியாது. ஏனெனில் மார்க்கம் இந்தப் பாதையை முற்றிலும் தடை செய்துவிட்டது. ஆக, நீங்கள் நிக்காஹ் செய்யும் போது அவளைத் தன்னோடு சேர்த்து இணைத்து வாழவைக்க வேண்டும் என்ற சரியான நிய்யத்தில் செய்ய வேண்டும். அதனால்தான் அவளை வாழ்க்கைத் துணைவி என்கிறோம். திருமணம் என்பது ஒரு சீசன் பொருளல்ல, மாறாக அது வாழ்க்கை முழுமைக்குமான பந்தம். மனைவி என்பவள் வாழ்க்கை முழுமைக்குமான தோழியாகின்ற ஓர் ஒப்பந்தம்.

## நபி அவர்களின் துக்கத்தில் பங்கு கொண்டவர்

நபி (ஸல்) அவர்களின் சரித்திரத்தைப் புரட்டிப்பாருங்கள். முதன் முதலாக வஹீ இறங்கிய சமயம் நபி (ஸல்) அவர்கள் தன் மனக்கவலையை யாரிடம் சென்று திறந்து வைத்தார்கள். தன் மனைவிக்கு முன்னால்தான் எடுத்து வைத்தார்கள். மனைவிதான் போர்வையைப்போர்த்தி படுக்க வைத்தார்கள். மனைவிதான் ஆறுதல் கூறினார்கள். அதே மனைவிதான் வரகா பின் நவ்ஃபல் என்பவரிடம் அழைத்துச் சென்றார்கள். பாருங்கள்! வாழ்க்கையில் பெரும் சுமை சுமத்தப்பட்ட சந்தர்ப்பத்தில் மனைவிதான் உடன் இருக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மரணம் எப்படிப்பட்ட நிலையில் ஏற்பட்டது தெரியுமா? ஹஜ்ரத் ஆயிஷா சித்தீகா (ரலி) அவர்களின் மடியில் நபி (ஸல்) அவர்களின் பரகத் பொருந்திய தலை இருக்கின்ற நிலையில் நபி (ஸல்) இவ்வுலகை விட்டுப் பிரிந்தார்கள். ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி), உமர்

(ரலி) அங்கே இருந்திருக்கலாமே. கண்ணியமிக்க மற்ற சஹாபிகளும் அச்சந்தர்ப்பத்தில் பணிவிடைக்காக வந்திருக்கலாமே. நிச்சயமாக முடியவே முடியாது. ஏனெனில், அல்லாஹ்வின் பிரியமான நபி (ஸல்) அவர்கள் தமது இந்த வழிமுறையின் மூலமாக மனிதனின் வாழ்வில் மனைவியின் தரம் என்ன என்பதை உலகிற்கு உணர்த்துகிறார்கள். நீங்கள் உலகை விட்டுச் செல்வதானாலும் மனைவியின் மடிதான் அதற்கான சிறந்த இடம் என்று எடுத்துரைக்கிறார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் கடைசி போதனை

இப்பொழுது கடைசி நிமிடங்களில் நபி (ஸல்) அவர்கள் கூறிய வார்த்தைகளை ஸய்யிதா ஆயிஷா (ரலி) அவர்கள் காது கொடுத்துக் கேட்கிறார்கள். சப்தம் மெலிந்திருந்தது. நபி (ஸல்) அவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். தவ்ஹீத் - ஏகத்துவத்தில் பிடிப்புடன் இருங்கள். உங்களின் கீழுள்ளவர்களான உங்கள் மனைவியர், மற்றுமுள்ளவர்களின் விசயத்தில் அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். இது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கையுடைய மொத்த சாரம்சம். அடியான் அல்லாஹ்வை பயந்து ஏகத்துவக் கொள்கையில் பிடிப்புடன் இருக்க வேண்டும். அடுத்ததாகத் தனக்குக் கீழ் உள்ளவர்களிடம் குறிப்பாக மனைவியர் விசயத்தில் அல்லாஹ்வை பயப்பட வேண்டும்.

## கண் குளிர்ச்சி

ரஹ்மானாகிய அல்லாஹ்வின் நல்லடியார்களுடைய ஒரு துஆவைக் அல்லாஹுதஆலா குர்ஆனில் குறிப்பிடுகிறான்.

ربنا هب لنا من أزواجنا وذرياتنا قرة أعين واجعلنا للمتقين إماما

எங்கள் இரட்சகனே! எங்களின் மனைவியரிலிருந்தும் பிள்ளைகளிலிருந்தும் எங்களுக்கு கண் குளிர்ச்சியைத் தருவாயாக! (அல்ஃபுர்கான் : 74 ) அதாவது அவர்களைப் பார்த்தாலே உள்ளம் குளிர்ந்திட வேண்டும். மனம் குதூகலிக்க வேண்டும். இப்படிப்பட்ட மனைவி மக்களை அல்லாஹ் வழங்குவானாக !

## கிழவனாக்கிவிடும் மனைவி

ஒரு மனைவி கணவனுக்கு ஒத்துப்போகவில்லை, தீனுடைய காரியங்களில் உதவி புரிவதில்லை என்றால், அல்லது மற்ற காரியங்களில் கணவன் ஒன்று சொல்ல, மனைவி வேறொன்று சொல்கிறாள் என்றால், அந்தக் கணவனைப் போன்ற பரிதாபப் பிறவி உலகில் வேறு யாரும் இருக்க மாட்டார்கள். எனவேதான், ஹதீஸில் துஆ ஒன்று கற்றுத்தரப்பட்டுள்ளது. اللهم إني أعوذ بك من امرأة تشيبني قبل المشيب "யா அல்லாஹ்! முதுமை வருவதற்கு முன்பே என்னைக் கிழவனாக்கி விடும் மனைவியை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்".

இவ்வாறு தான் ஒரு வாலிபனின் மனைவி அவனுடன் ஒத்துப் போகாமலே இருந்தாள். அவன் தன் மனைவியிடம், "சரி! நான் மரணித்துவிட்டால் நீ உடனே மறுமணம் செய்து கொள்ள வேண்டும்" என்றான் அதற்கு அவள், "ஏன் அப்படிச் செய்ய வேண்டும்?" என்று கேட்டாள். அதற்கு அவன் "உனது இரண்டாவது கணவனாவது நான் இளம் வயதிலேயே ஏன் மரணமானேன் என்ற காரணத்தைப் புரிந்து கொள்வான் அல்லவா?" என்று பரிதாபமாகச் சொன்னானாம். எனவே ஒருவனின் இல்லற வாழ்வு மகிழ்ச்சியாக இல்லையென்றால் அவனது வாழ்க்கை வாழ்க்கையாக இருக்காது. அது நரகமாகிவிடும்.

ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களிடம் ஒரு மனிதர், "நிக்காஹ் என்றால் என்ன?" என்று கேட்டார். அதற்கு ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள், لزومُ مهر முதலில் நிக்காஹ் மூலம் மஹர் கடமையாகிறது என்று கூறினார்கள். "பிறகு என்ன?" என்று கேட்டார். سرورُ شهر "பிறகு முப்பது நாட்களில் மோகம் என்றார்கள்''. ''அதன்பிறகு என்ன?'' என்றார், همومُ دهر "காலமெல்லாம் நீடிக்கும் கவலை" என்று பதிலளித்தார்கள், "பிறகு என்ன?" என்று கேட்டார், كسورُ ظهر "பிறகு முதுகு உடைந்து போவது" என்றார்கள். "கடைசியில் என்ன?" என்று கேட்டார். دخولُ قبر "இறுதியில் கப்ரில் நுழைவதுதான்" என்று கூறினார்கள்.

### ஒருவர் மற்றவரின் நிம்மதிக்காக...

எனவே கணவன் மனைவி இருவரும் தத்தமது பொறுப்புகளை

உணர வேண்டும். சிறந்த மனைவி என்பவள் தன் கணவனுடன் நன்முறையில் நடப்பவள்தான், அவனுக்கு வழிப்படும் நற்குணமுள்ளவள் தான். இவள் கணவனுக்குக் கிடைத்த பரிசாவாள்.

கணவன்மார்களில் சிறந்தவர் யாரென்றால், ஹதீஸில் குறிப்பிட்டது போல், மனைவியுடன் பிரியமாக, அன்பாக, நல்ல இல்லறம் நடத்துபவன்தான். சற்று சிந்தித்துப்பாருங்கள். அல்லாஹுதஆலாவே குர்ஆனில், "நீங்கள் உங்கள் மனைவியருடன் நன்முறையில் வாழ்க்கை நடத்துங்கள்" (4-19) என்று பெண்ணினத்திற்காகச் சிபாரிசு செய்கிறான் என்றால் இது எவ்வளவு ஆச்சரியமான விசயமாக இருக்கும்! அகிலத்தின் அதிபதியான அல்லாஹ்வே தன் வேதத்தில் பெண்களுக்காகச் சிபாரிசு செய்கிறான் என்றால் இது சாதாரண விசயமா?

திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள், இந்த வசனத்தின் கீழ் எழுதுகிறார்கள். ஒரு மனிதன் இந்த ஆயத்தைக் கவனத்தில் கொண்டு தன் மனைவியுடன் நல்லறம் நடத்தினால் கியாமத் நாளன்று அல்லாஹுதஆலாவும் அவனுடன் நன்முறையில் நடந்து கொள்வான். "அடியானே! நீ எனது சிபாரிசை ஏற்று நடந்தாய். இன்று உன் அமல்களை நான் ஏற்றுக் கொள்கிறேன்" என்பான். ஆக, இல்லறத்தை நல்லறமாக்குவது கணவன் மனைவியின் பொறுப்பு ஆகும்.

நல்ல இல்லறத்தை அடையாளம் காண்பது எப்படி என்றால், அங்கே "லியஸ்குன இலைஹா" என்று அல்லாஹ் கூறுவது போல் அதன்மூலம் நிம்மதி கிடைக்க வேண்டும். மனைவியின் வாழ்வில் நிம்மதி இல்லையென்றால் அதில் ஏதோ குறைபாடு இருக்கிறது என்றுதான் அர்த்தம்.அதே போல் கணவனின் வாழ்விலும் நிம்மதி பறிபோய் விட்டது என்றாலும், எங்கேயோ குறைபாடு இருக்கிறது என்று தான் அர்த்தம்.

கணவன் மனைவி இருவரும் ஷரீஅத், சுன்னத் படி வாழ்ந்தால் அல்லாஹ் அவர்களுக்கு நிம்மதி நிரம்பிய வாழ்வை வழங்கிடுவான். உணவுத் தட்டுப்பாடு, வருமானத்தின் குறைபாடு இவையெல்லாம் மனிதனுக்கு ஒரு பொருட்டே அல்ல. இவை வாழ்வின் ஒரு அங்கமே தவிர இவையே வாழ்க்கையல்ல. எனவே கணவன் மனைவி இருவரும் நிம்மதி நிறைந்த வாழ்க்கையை வாழ முடிந்தவரை முயல வேண்டும்.

## ஒரு புத்திசாலி கணவனின் அறிவுரை

ஒரு கணவன் தன் மனைவியைச் சந்தித்த முதல் சந்திப்பில், "நான்கு விசயங்களை நீ எப்பொழுதும் கவனத்தில் கொள்ள வேண்டும்" என்று அறிவுரை கூறினான்.

முதல் விசயம் என்னவென்றால், நான் உன்மீது அளவில்லா அன்பு வைத்திருக்கிறேன். எனவே தான் உன்னை மனைவியாகத் தேர்ந்தெடுத்துள்ளேன். நீ எனக்குப்பிடிக்காமல் இருந்திருந்தால் திருமணம் செய்து வீட்டிற்கு அழைத்து வந்திருக்க மாட்டேன். உன்னை மனைவியாக்கி அழைத்து வந்ததே நான் உன் மீது அன்பு வைத்திருக்கிறேன் என்பதற்கான சாட்சி.

அதே சமயம், நான் மனிதன்தானே தவிர மலக்கல்ல. எப்பொழுதாவது நான் தவறு செய்து விட்டால், அதை நீ மறைத்துப் பழக வேண்டும். சிற்சில தவறுகளைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிட வேண்டும்.

மனிதனிடம் தவறுகள் இருப்பது இயற்கை. அல்லாஹ் மன்னிப்புடைய வாசலைத் திறந்தே வைத்துள்ளான். அப்படியிருக்க மனிதன் மன்னிக்கக் கூடாதா?

இரண்டாவது விசயம், "என்னை ஒரு மத்தளமாகத் தட்டிக் கொண்டிருக்கக் கூடாது" என்று கூறினான். "அப்படியென்றால் என்ன அர்த்தம்?" என்று மனைவி கேட்டாள். "எப்பொழுதாவது நான் கோபப்பட்டால் நீ எனக்கு முன்னால் பதில் பேசிக் கொண்டிருக்கக் கூடாது".

கணவன் கோபப்பட்டு ஏதாவது பேசும்போது மனைவியும் அதற்கு மேலே பதில் பேச ஆரம்பித்தால் அது மிகப்பெரிய ஆபத்தில் போய் முடியும். கணவன் கோபத்தில் இருக்கும் போது மனைவி Avoid செய்து ஒதுங்கிவிட வேண்டும். மனைவி கோபப்பட்டால் கணவன் ஒதுங்கிவிட வேண்டும்.

இருவரும் ஒரே நேரத்தில் கோபப்படுவது, ஒரு கயிற்றை இருபுறமும் இழுப்பதற்குச் சமம். இருவரும் வேகமாக இழுத்தால் பந்தமே அறுந்து போய்விடும். மேலும் தம்பதியர் இருவரும் ஒரே நேரத்தில்

கோபப்படும்போது கணித விதிப்படி அக்கோபம் (Square) பன்மடங்காகிவிடும். அதன் விளைவு அபாயகரமாகி விடும். ஜாக்கிரதை!

மூன்றாவது அறிவுரை கூறினார். "என்னுடன் எல்லா விதமான இரகசியங்களையும் தாராளமாகப் பகிர்ந்து கொள். ஆனால் மற்ற மனிதர்கள் பற்றிய முறையீட்டை மட்டும் என்னிடம் கொண்டு வராதே".

பெரும்பாலும் பார்க்கிறோம். கணவன் மனைவி இருவரும் நிம்மதியாகத்தான் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். ஆனால் நாத்தனார் பற்றிய பேச்சு, மாமியார் பற்றிய பேச்சு, அவரை, இவரைப் பற்றிய பேச்சுக்கள் வரும்போது தான் வாழ்க்கையில் விஷம் கலந்து விடும். எனவேதான் அவர் சொன்னார்; பிறர் பற்றிய முறையீடுகளை என்னிடம் கொண்டு வராதே!.

அவர் கூறிய நான்காவது அறிவுரை, "உள்ளம் ஒன்றுதான் இருக்கிறது. அதில் ஒன்று பிரியமிருக்கும் அல்லது வெறுப்பிருக்கும் ஒரே நேரத்தில் இரண்டும் சங்கமிக்க முடியாது". (எனவே உள்ளத்தில் அன்பை மட்டும் நிரப்ப முயற்சி செய்ய வேண்டும்) என்றார்.

அவரது மனைவி இந்த நான்கு அறிவுரைகளையும் கவனத்தில் கொண்டு செயல்பட்டுவந்தாள், அவர்களது வாழ்வும் வசந்தமானது.

## கணவன் தன் மனைவியிடம் விரும்புவது என்ன?

மனிதனின் சுபாவமும், சிந்தனையும் வேறுபடுவது போன்று விருப்பங்களும் மாறுபடுகின்றன. எனவேதான் பார்க்கிறோம். இளம் வயது கணவனாக இருந்தால், அவரது விருப்பம் இதுவாகத்தான் இருக்கும். என் மனைவி அழகானவளாக, நல்ல குணங்களும் பழக்கங்களும் உள்ளவளாக, பொறுமைசாலியாக, பிறர் குணங்களைப் புரிந்து நடப்பவளாக மேலும் கற்பொழுக்கமுள்ளவளாக இருக்க வேண்டும் என்று விரும்புவான்.

ஆமாம்! ஒரு கணவன் தன் மனைவியின் எந்தத் தவறையும் மன்னித்திடுவான். ஆனால் அவளது நடத்தையில் ஏதாவது தவறு ஏற்பட்டால் அதை மன்னிக்கவே மாட்டான். மிக ஆச்சரியமான விசயம் என்னவென்றால் தானே அதுபோன்ற பாவத்தில் சிக்கியிருப்பான்.

தன்னை பிறர் மன்னிக்க வேண்டும் என்று நினைப்பான். ஆனால் மனைவியிடம் அதே போன்ற தவறுகள் ஏற்பட்டுவிட்டால் என்ன விலை கொடுத்தாலும் அவளைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ளவே மாட்டான். ஆக, கணவனின் பார்வையில் மனைவியின் அனைத்துத் தவறுகளும் மன்னிக்கத் தகுந்தவை. ஆனால் அவளது நடத்தை மட்டும் தடம் புரண்டு விட்டால் அது அவனது பார்வையில் இருந்து அவளை விழச் செய்துவிடும்.

இதற்கு இன்னொரு உதாரணத்தைப் பாருங்கள். தாய், தந்தை எப்படி வேண்டுமானாலும் இருப்பார்கள், ஆனால் தன் பிள்ளைகள் நல்லவர்களாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படுவார்கள். தொழுகையில்லாத, மஸ்ஜிதின் தொடர்பே இல்லாதவர்கள் கூட தம் பிள்ளைகள் நல்லவர்களாக இருக்க வேண்டும் என்றுதான் ஆசைப்படுவார்கள். அதே போன்று ஒவ்வொரு கணவனும் தன் மனைவி நன்னடத்தை உள்ளவளாக, பத்தினியாக வாழ வேண்டும் என்றே ஆசைப்படுவான். அல்லாஹுதஆலா ஆண்களின் இயற்கை குணத்தை இப்படியே படைத்துள்ளான்.

கணவனுக்குக் கொஞ்சம் வயதாகிவிட்டால், அறிவாற்றலில் என்னைத்தான் சிறந்தவனாக என் மனைவி நினைக்க வேண்டும் என்று ஆசைப்படுவான். மனைவி நல்ல புத்திசாலியாக இருந்தாலும், என் முடிவைக்கேட்டுத்தான் செயல்பட வேண்டும் என்று அந்தக் கணவன் விரும்புவான். என் அபிப்பிராயத்தைக் கேட்க வேண்டும். நான் சொல்வதைக் கேட்டு நடக்க வேண்டும். உண்மையில் புத்திக் கூர்மையுள்ள நல்ல மனைவிமார்கள் எது நல்லதோ அதன்படி தான் செயல்பட வேண்டும் என்ற மனோ நிலைக்குத் தன் கணவனைக் கொண்டு வந்துவிடுவார்கள்.

கணவனின் இரண்டாவது விருப்பம் என்னவாக இருக்கும் என்றால் எப்பொழுதும் என் மனைவியின் முகத்தில் புன் சிரிப்பு தவழ வேண்டும் என்பதுதான். பெண்கள் இவ்விஷயத்தை மனதில் ஆழமாகப் பதியவைக்கவேண்டும். கணவன் வெளியே பல வேலைகளில் மூழ்கியிருக்கிறான். அதனால் அவனுக்குள் பல சிந்தனை ஓட்டங்கள் கொடுக்கல் வாங்கல் பிரச்சனைகள், பிறருடன் ஏற்பட்ட சந்திப்புகள்

போன்ற குழப்பங்கள் மூலமாகக் களைப்படைந்து ஒரு தீர்வைத் தேடி வீட்டிற்கு வருகிறார். அங்கேயும் அவனுக்கு வாடிய முகமே காட்சியளிக்கிறது என்றால் அவனது மனம் உடைந்து போய்விடும் அல்லவா?

அல்லது அவனுக்கு முன்னால் மனைவி அழுக்கான முகத்துடன் உட்கார்ந்து இருக்கிறாள் என்றால் கணவன் அவள் பக்கம் கவனம் செலுத்துவானா? அல்லது எப்பொழுதும் அழுகையும், கண்ணீருமாக இருந்து குழப்பங்களிலிருந்து நிம்மதி பெற வீட்டிற்கு வருபவனின் குழப்பங்களை மேலும் பெரிதாக்குகிறாள் என்றால் அந்த அப்பாவிக் கணவன் என்ன செய்வான்? நீங்களே சொல்லுங்கள்.

எப்பொழுதும் கவனத்தில் கொள்ள வேண்டிய விசயம் என்னவென்றால் நான் எப்பொழுது வீட்டிற்குள் நுழைந்தாலும் ஒரு அழகான மலர்ந்த முகம் என்னை வரவேற்க வேண்டும். அந்த வதனத்தைப் பார்த்தவுடனே, வெளியே ஏற்பட்ட கவலைகள் அனைத்தும் ஓடி ஒளிந்து என் மனதில் மகிழ்ச்சி பொங்க வேண்டும். என்பது ஒவ்வொரு ஆணுக்குமுள்ள இயற்கையான விருப்பமாகும். மேலும் என் மனைவி பணிவிடை செய்பவளாக, இரக்க குணம் கொண்டவளாக, மன்னித்து விடுபவளாக இருக்க வேண்டும் என்றும் அவன் விரும்புவான்.

கணவனுக்கு வயதாகிவிட்டால், அதாவது முதுமையடைந்து விட்டால் என் மனைவி என்மீது நம்பிக்கை கொண்டவளாக இருக்க வேண்டும். தவறான எண்ணங்களுக்கு இடம் தரக்கூடாது. அவநம்பிக்கை கொள்ளக் கூடாது. என்னிடம் பொய் சொல்லக் கூடாது என்று விரும்புவான். ஏனெனில் வயதாகிவிட்ட பிறகு சில பெண்கள் அதிபுத்திசாலியாகி விடுவார்கள். ஒரு விசயத்தை ஊதிப் பெரிதாக்கும் பழக்கம் வந்துவிடும். ஒரு பெண் தன் கணவனிடம் இப்படி நடந்து கொண்டால், பொய் சொன்னால், குறிப்பாக முதுமைக் காலத்தில் கணவன் மனதில் அதிக வெறுப்புதான் வரும்.

அடுத்ததாக, என்னைப்பற்றி என் மனைவி புறம் பேசக்கூடாது என்றும் நினைப்பான். வயது முதிர்ந்த பெண்கள், கொஞ்சம் கவனமாகக்

கேளுங்கள். அவர்கள் வயது முதிர்ந்த காலத்தில் தம் கணவரைப் பற்றி புறம் பேசக்கூடாது. பெற்றோரிடமும் அடுத்த பெண்களுடனும் அல்லது வேறுயாரிடமும் தம் கணவரைப் பற்றி புறம் பேசக் கூடாது. ஏனெனில் இப்பொழுது என் கண்ணியம் உயர்த்தப்பட வேண்டும் என்று அந்த முதியவர் விரும்புவார். கணவனுக்குள்ளே பல நல்ல குணங்கள் இருக்குமல்லவா? மனைவி அந்த நல்ல பண்புகளைத்தான் பிறருக்கு முன்னால் எடுத்துரைக்க வேண்டும். அப்பொழுதுதான் பிறர் மனதில் அவரது மரியாதை வளரும்.

இறுதியாக, கஷ்டமான நேரத்தில் மனைவி எனக்கு உதவியாக இருக்க வேண்டும் என்று கணவன் விரும்புவான். எனவே, கணவனுக்கு ஏதாவது சிக்கல் சிரமங்கள் வந்தால் மனைவி அவனுக்கு உற்ற துணையாக இருக்க வேண்டும்.

## கணவனின் மனதை வெல்ல...

நமது ஷைகுமார்கள் இல்லற வாழ்வின் பாடங்களை மிகவும் விளக்கமாகத் தெளிவுபடுத்தி இருக்கிறார்கள். அவற்றில் சில விஷயங்களை உங்களுக்கு முன்னால் வைக்கிறேன். அந்த விஷயங்களை மட்டும் நமது பெண்கள் செயல்படுத்துவார்கள் என்றால் தமது கணவனிடம் பெரும் மதிப்பையும் உயர் அந்தஸ்தையும் பெற்றுக் கொள்வார்கள். கணவனின் உள்ளத்திலுள்ள அவர்கள் மீதான அன்பு பன்மடங்கு பல்கிப் பெருகும்.

பிறகென்ன..! அந்த பெண்களின் வாழ்வு வசந்தகாலமாகிவிடும். ஏனென்றால் கணவனின் உள்ளத்தில் அன்பெனும் சிம்மாசனத்தில் அமர்ந்தவள் தான் உண்மையான இல்லத்தரசியாவாள் எனவே பின் வரும் பாடங்களை கவனமாகக் கேட்டுச் செயல்பட முயலுங்கள். அல்லாஹ் தவ்ஃபீக் செய்வானாக!

## 1. கணவனிடம் கண்ணியமாக பேசுங்கள்

முதன்மையான வழிமுறை என்னவென்றால், மனைவி தன் கணவனுடன் எப்பொழுதும் மென்மையாக, மரியாதையான வார்த்தைகளால் பேச வேண்டும். ஏனெனில் அல்லாஹுதஆலாவே

கணவனை வீட்டின் நிர்வாகியாக ஆக்கி இருக்கிறான். الرِّجَالُ قَوَّامُونَ عَلَى النِّسَاءِ "ஆண்கள் பெண்களை நிர்வகிப்பவர்கள்" (அந்நிஸா:34) என்றும், மற்றொரு இடத்தில், لِلرِّجَالِ عَلَيْهِنَّ دَرَجَةٌ கணவன்மார்களுக்கு மனைவிமார்களைவிட உயர் அந்தஸ்து இருக்கிறது". (2-228) என்றும் அல்லாஹ் கூறுகிறான். அல்லாஹுவே இப்படி அந்தஸ்தை வழங்கிவிட்ட பொழுது அல்லாஹ்வின் அடிமைப் பெண்களாகிய மனைவிமார்களும் "எனது கணவரை அல்லாஹ் எனது தலைவராக ஆக்கியிருக்கிறான்" என்ற விஷயத்தை சந்தோஷமாக ஏற்றுக் கொள்வதே சாலச் சிறந்த விசயமாகும். அதுவே அவளுக்கு இம்மை, மறுமை ஈருலகிலும் நற்பலன்களைப் பெற்றுத்தரும்.

ஆனால் இக்கால நடைமுறை முற்றிலும் தலைகீழாகி விட்டதை நாம் பார்க்கிறோம். மனைவி கொஞ்சம் அதிகமாகப் படித்திருந்தால், கணவனை விட புத்திசாலியாக, அறிவாளியாக இருந்தால் போதும், கணவனிடம் அதிகாரத் தோரணையில் பேசுகிறாள். ஏதோ ஆர்டர் போடுவதைப் போன்று பேச ஆரம்பித்து விடுகிறாள். இச்செயல்தான் கணவனின் உள்ளத்தில் வெறுப்பின் விதைகளைத் தூவி விட்டுச் செல்கிறது. எனவே மனைவி, அழகில், கல்வியில், அறிவில், செல்வச் செழிப்பில் என எல்லாக் கோணத்திலும் சிறந்தவளாக இருந்தாலும், அல்லாஹுதஆலா கணவனைத்தான் உயர் அந்தஸ்துடையவனாக ஆக்கியுள்ளான். எனவே மனைவி கணவனிடம் நளினமாகப் பேச வேண்டும். (மரியாதையாகப் பேச வேண்டும்) நீ, போ, வா என்ற வார்த்தைகளுக்கு பதிலாக நீங்கள், தாங்கள் என்ற வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும். இப்படி மரியாதையாகப் பேசுவது கணவனின் மனதில் அன்பு பெருகக் காரணமாகிவிடும்.

ஆமாம், ஸஹாபிப் பெண்கள் தம் கணவர் கூறிய தகவலைச் சொல்லும் பொழுது حدثني سيدي 'என்னுடைய எஜமான் கூறினார்' என்று கூறுவார்கள் என்பதாக வரலாற்றில் பார்க்கிறோம். சஹாபிப் பெண்மணிகள் ஹத்தஸனீ ஸய்யிதீ 'என் எஜமானர் சொன்னார்' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்தி இவ்வளவு மரியாதையாகப் பேசியிருக்கிறார்கள் என்றால் நமது காலப் பெண்கள் குறைந்த பட்சம் "தாங்கள்" என்ற வார்த்தையையாவது பயன்படுத்தலாம் அல்லவா?

## 2. பொறுமை, சகிப்புத்தன்மையை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்

இரண்டாவது விஷயம், பெண்கள் பொறுமையை, சகிப்புத்தன்மையை தமக்குள்ளே உருவாக்கிக் கொள்ள வேண்டும். மனைவியை "வீட்டுக்காரி" என்று அழைப்பதுண்டு. ஏனெனில் வீட்டின் அஸ்திவாரமே பெண்கள்தான். ஒரு பெண் தன் வீட்டை செழிப்பாக்க நினைத்தால் அவ்வாறே செழிப்பாக்கி விடுவாள். அதே போல் வீட்டை குட்டிச்சுவராக்க நினைத்தாலும் அவ்வாறே பாழடைந்த, குட்டிச்சுவராக்கி விடுவாள் என்று நமது பெரியவர்கள் சொல்கிறார்கள். ஓர் ஆண் கடப்பாரையைக் கொண்டு தனது வீட்டின் அஸ்திவாரத்தை இடித்துவிட நினைத்தாலும் அது இயலாமல் போய்விடும். ஒரு பெண் சிறிய ஊசியை கொண்டு வீட்டின் அஸ்திவாரத்தை ஆணுக்கு முன்னால் தரைமட்டமாக்கிவிடுவாள். எனவேதான் அவளுக்கு பொறுமையும், சகிப்புத்தன்மையும் மிகமிக அவசியம்.

எப்பொழுதாவது தன் விருப்பத்திற்கு மாறாக ஒரு காரியம் நடந்துவிட்டால், பொறுமையாளர்கள் மீது அல்லாஹ் அன்பு கொள்கிறான். அல்லாஹ்விற்காக பொறுமையாக இருங்கள்.( 14-7 ) என்று அல்லாஹ் கூறியுள்ளான். எனவே இவ்விஷயத்தில் நான் பொறுமையாக இருந்து கொள்கிறேன். அல்லாஹ்வின் நற்கூலியை ஆதரவு வைக்கிறேன் என்று நினைத்து சற்று பொறுமையாக இருந்து பாருங்கள். சிறிது நேரத்தில் இந்தப் பொறுமை, சகிக்க முடியாத வார்த்தைகளைப் பேசிய அதே கணவனை உருக வைத்து அன்புடன் திரும்பி வர வைக்கும்.இவரைப் போன்று அன்பு கொள்பவர் உலகத்தில் யாருமே இருக்க மாட்டார்கள் என்று நினைக்குமளவு அவனை மாற்றி விடும். அவனும் மனிதன்தானே! அவனுக்கும் உணர்வுகள் இருக்குமல்லவா? இதற்கு தான் 'சகிப்புத்தன்மை' என்று பெயர். மனைவியிடம் ஏதாவது தவறு நடந்து விட்டால் கணவன் சகித்துக்

கொள்ள வேண்டும். கணவனிடம் தவறு ஏற்பட்டால் மனைவி பொறுத்துக் கொள்ள வேண்டும்.

உயிரற்ற பாத்திரங்களைச் சேர்த்து அடுக்கும் போதே சப்தம் வருகிறது. அதுபோல உயிருள்ள மனிதகளிடம் சப்தம் வருவது சகஜம்தான். பெரியவிஷயமல்ல. ஒருவர் ஜாலி மூடில் இருக்கும் பொழுது மற்றவர் ஏதாவது சிந்தனையில் இருக்கலாம். ஒருவர் ஒரு அர்த்தத்தில் ஒன்றைச் சொல்ல, மற்றவர் வேறுவிதமாகப் புரிந்துகொண்டு தவறான எண்ணங்கள் தோன்றுவதும் இயற்கைதான். இது பெரியவிஷயமல்ல. இது போன்ற விஷயங்களில் சகிப்புத்தன்மையைக் கையில் எடுத்துக் கொண்டு செயல்பட்டால் வாழ்க்கை வசந்தமாகிவிடும்.

சகிப்புத்தன்மையும், பொறுமையும் இன்றி INSTANTANEOUS REACT உடனடியான பிரதிபலிப்பு நடவடிக்கைகளில் இறங்குகிறவன் நல்ல மனிதனாக இருக்க முடியாது. சின்ன விசயம் நடந்தாலும் இவர்களுக்குள்ளே நெருப்பு ஜுவாலை விட்டு எரிய ஆரம்பித்துவிடும். மற்றவர்களுடைய பேச்சைப் புரிந்து கொள்ளுவதற்கு பதிலாக தன் வாயிலிருந்து வார்த்தைகளைக் கொட்ட ஆரம்பித்து விடுவார்கள்.

### 3. போதுமென்ற மனமே போதும்

மனைவி தன் கணவனின் செல்வத்தைப் பற்றிய பயத்தை தனக்குள் உருவாக்கிக் கொள்ள வேண்டும். அவளுக்காக கணவனால் நூறு ரூபாய் செலவு செய்ய முடியும் என்றிருந்தால் அவன்மீது இருநூறு ரூபாயின் சுமையைச் சுமத்தக் கூடாது. ஐநூறு செலவு செய்ய முடியும் என்றிருக்கும்போது எழுநூறுடைய சுமையைச் சுமத்தக் கூடாது. கணவன்மார்களின் பொதுவான முறையீடு இதுதான்! நாங்கள் யோசித்துச் செலவு செய்கிறோம். நீ இவ்வளவு செலவுக்குள் சுருக்கிக் கொள் என்று மனைவிக்கு எவ்வளவோ சொல்கிறோம். ஆனால் அவளோ ஒரு படி அதிகமாகத்தான் செலவு செய்கிறாள் என்று புலம்புகின்றனர்.

காலம் செல்லச்செல்ல இப்பழக்கம் கணவனின் மனதில் பெரும் சுமை இறங்கக் காரணமாகிவிடும். எனவே கணவனின் பொருளைச்

சிக்கனமாகப் பயன்படுத்தப் பழகிக்கொள்ளுங்கள். தனது பொருளை மிச்சப்படுத்த நினைப்பது போன்று தன் கணவனின் பொருளையும் எப்படி மிச்சப் படுத்துவது என்று யோசியுங்கள்.

மனைவியின் உள்ளத்தில் கணவனின் பொருள் பற்றிய கவலை, பயம் உருவாகி விட்டால் அவள் மீது கணவனுக்கு நம்பிக்கை பிறக்க ஆரம்பிக்கும். எனவே தரத்தை விட மீறியதைத் தேடக்கூடாது. மாறாக, மனைவியின் ஒரே தேட்டம் கணவனாகத்தான் இருக்க வேண்டும். எங்காவது வெளியூர் செல்லும் போது உனக்காக என்ன வாங்கி வர வேண்டும் என்று கேட்கும் கணவனிடம் நீங்கள் நல்லபடியாகத் திரும்பி வருவதுதான் எனக்கு மிகப்பெரிய பரிசு. எனக்கு நீங்கள்தான் வேண்டும். நீங்கள் இருந்தால் போதும். என் வாழ்க்கையில் அனைத்தும் கிடைத்த சந்தோஷம் இருக்கும் என்று, உளமாறக் கூறவேண்டும்.

## 4. எந்த நிலையிலும் கணவனுடன் கைகோர்த்து நிற்க வேண்டும்.

மனைவி எப்படிப்பட்ட நிலையிலும் கணவனுக்கு ஒத்துழைக்க வேண்டும். வீட்டில் ஏதாவது முடிவு செய்யப்படுகிறது. அதில் கணவனின் அபிப்பிராயம் ஒன்றாக இருக்கிறது. அல்லது ஒரு விசயத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டுவிட்டது. ஒருவர் ஒரு கருத்தைச் சொல்கிறார். கணவர் மற்றொரு கருத்தைச் சொல்கிறார். இதுபோன்ற சந்தர்ப்பங்களில் மனைவி நேராக தன் கணவனுக்கு முழு ஒத்துழைப்பு தரவேண்டும்.

ஹஜ்ரத் உமர்பின் அப்துல் அஜீஸ் (ரஹ்) ஜனாதிபதியாக அமீருல் முஃமினாக ஆன சமயத்தில் தன் மனைவியை அழைத்து உன் தந்தையும் மன்னராக இருந்தார். உன் சகோதரரும் மன்னராக இருந்தார். இப்பொழுது உன் கணவனான நானும் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளேன். எனக்கு முன்பிருந்தவர்கள் பைத்துல்மால் பொதுச் சொத்திலிருந்து தேவையை விட அதிகமான செல்வங்களை எடுத்துத் தத்தமது உறவினர்களுக்கு வழங்கியிருக்கிறார்கள்.

நான் அந்தச் செல்வங்கள் அனைத்தையும் பைத்துல்மாலிற்கு திருப்பிச் செலுத்திவிட விரும்புகிறேன். என் வீட்டிலிருந்து அதனை துவக்கப் போகிறேன். எனவே, உன்னிடமுள்ள வைரமாலையையும்,

மற்ற நகைகள் அனைத்தையும் நீயே பைத்துல்மாலில் சேர்த்துவிடு. இப்பொழுது இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்! "ஒன்று அந்த நகைகளை உன்னால் விட முடியாது என்றால் என்னை விட்டுவிடு. அல்லது என்னை விட்டுக்கொடுக்க முடியாது என்றால் அவை அனைத்தையும் தியாகம் செய்துவிடு". என்று சுற்றி வளைக்காமல் சொல்லி முடித்தார்கள்.

அவர்களின் மனைவி பாத்திமா (ரஹ்) ஒரு புன்னகையை உதிர்த்துவிட்டு, "அமீருல் முஃமினின் அவர்களே! இதென்ன இதைவிடப் பன்மடங்கு செல்வத்தையும் உங்களுக்காகத் தியாகம் செய்ய நான் தயார்" என்றார்கள். இத்தகைய பெண்கள் தான் தன் அன்பின் காரணமாக தன் கணவனின் உள்ளத்தில் சிம்மாசனமிட்டு ஆட்சி செய்வார்கள். பாருங்கள்! கணவன் மார்க்கம் சொன்ன காரணத்தால் வெளிப்படையில் மனைவியின் மீது ஆட்சி செய்கிறான். மனைவியோ தன் அன்பை சிம்மாசனமாக்கி கணவனின் உள்ளத்தில் அமர்ந்து ஆட்சி நடத்துவாள்.

எனவேதான் கணவன், மனைவியின் தொடர்பைப்பற்றி கூறும்போது அவர்கள் உங்களுக்கு ஆடை, நீங்கள் அவர்களுக்கு ஆடை (2-187) என்று வர்ணிக்கப்பட்டுள்ளது. இதன் கருத்து என்னவென்றால் எவ்வாறு மனிதனின் ஆடை குளிர் மற்றும் வெப்பத்தைவிட்டு அவனைக் காக்கிறதோ. அதே போல, மனைவி தன் கணவனை பிரச்சனைகள், ஆபத்துகள் மற்றும் முஸீபத்துகளை விட்டும் பாதுகாக்க வேண்டும். அதே போல், கணவனும் தன் மனைவியை ஆபத்துக்கள், குழப்பங்கள் மற்றும் முஸீபத்துகளை விட்டும் பாதுகாக்க வேண்டும்.

மனிதனின் உடலுக்கு மிக நெருக்கமாக ஆடை தான் இருக்கிறது. அதுதான் அவனோடு ஒட்டியிருக்கிறது. ஆடையைத தவிர வேறெந்த பொருளுக்கும் மனிதனோடு இவ்வளவு நெருக்கம் கிடைத்ததில்லை. இப்பொழுது மார்க்கம் சொல்கிறது. கணவனே! உனக்காக உன்னோடு மிக நெருக்கமாக இருப்பவள் உன் மனைவிதான். பிறகு மனைவியை நோக்கிச் சொல்கிறது. உன்னோடு மிக நெருக்கமாக உனக்காக

வாழ்பவன் உன் கணவன்தான். இவ்வாறு ஒரு பெண் தன் கணவனுக்கு அடிமைப் பெண்ணாகிவிடுவாள் என்றால், அவளுடைய கித்மத். பணிவிடைகளைப் பார்க்கும் கணவன் அவளுக்கு அடிமையாகிப் போவான்.

## 5. நல்லவர்களிடம்தான் ஒற்றுமை இருக்கும்

நியதியொன்று சொல்லித்தருகிறேன், மனதில் பதியவைத்துக் கொள்ளுங்கள். கணவன் மனைவி இவ்விருவருக்கும், நாம் இருவரும் ஓருயிர் ஈருடல் ஆகிவிடவேண்டும். இரண்டறக் கலந்துவிட வேண்டும். ஒருவர் மற்றவருக்கு அர்ப்பணமாகிவிட வேண்டும். இருவரும் பரஸ்பரம் அன்பு செலுத்தி வாழ்வைக் கழிக்க வேண்டும் என்ற ஆசைகள் இருக்கும். அதற்குத்தான் மனதில் பதியவைக்க வேண்டிய இந்த நியதி. "நாம் நல்லவர்களாகும் போதுதான் ஒற்றுமையாக வாழ முடியும். நமது குணங்கள் நல்லவையாகாத வரை உள்ளங்கள் ஒற்றுமையாகாது. நல்லவர்களாகி விட்டால் ஒற்றுமை உள்ளவர்களாகி விடலாம். எனவே கணவனும் தன் உள்ளத்தில் இறையச்சத்தை உருவாக்கிக் கொண்டு நல்லவனாக வாழ வேண்டும். மனைவியும் தன் உள்ளத்தில் இறையச்சத்தை உருவாக்கி கொள்ள வேண்டும். குர்ஆனில் பாருங்கள்! கணவன் மனைவியின் இல்லற வாழ்வைப் பற்றி விளக்கிக் கூறும் அத்தியாயங்களில் ஆங்காங்கே இறையச்சம் பற்றி வலியுறுத்திக் கூறப்படும். ஏனெனில் கணவன் மனைவியின் உள்ளத்தில் அல்லாஹ்வின் பயம் இல்லையென்றால் இருவரும் பரஸ்பரம் அன்பு செலுத்தி வாழ்வது கடினமாகிவிடும் என்பது அல்லாஹ்வுக்கு நன்கு தெரியும்.

நமது பெரியவர்கள் சிலர் கூறுவதுண்டு, ஒரு பெண் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் அடிமையாக இருக்கவில்லையென்றால் அவள் ஆயிரக்கணக்கானோருக்கு அடிமையாக வேண்டிய நிர்ப்பந்தம் உருவாகும். இப்பொழுது அலுவலகங்களில் வேலைபார்க்கும் பெண்களைப் பாருங்கள், விற்பனை செய்யும் பெண்களை (Sales Girls-ஐ) பாருங்கள், வாடிக்கையாளர்களிடம், சக அலுவலர்களிடம் எப்படியெல்லாம் குழைந்து குழைந்து பேச வேண்டிய நிலைக்குத்

தள்ளப்படுகிறார்கள். இப்பொழுது ஒருவனுக்கு மட்டும் அடிமையாகாதவள் ஆயிரம் மனிதர்களுக்கு அடிமையாகிவிட்டாள்.

## 6. ஊதிப் பெரிதாக்கும் பழக்கம் வேண்டாமே

நமது பெண்களிடம் அல்லாஹுதஆலா பெரும் நற்பண்புகளை வைத்துள்ளான். அப்பண்புகளை மேற்கத்திய பெண்களிடம் காண்பது அரிது. ஈமானில்லாத பெண்களிடம் அவை அறவே இருக்காது. நமது பெண்களிடம் இயற்கையாகவே வெட்கம், நாணம், ஏற்று நடக்கும் பண்பு, நம்பிக்கைக்குரியவளாக, நல்ல மனமுடையவளாக இருப்பது. பிள்ளைகளுடன் அளவிலா அன்பு, அர்ப்பணிப்பு, தியாகம்... இவ்வளவு நற்பண்புகள் மனிதனை வியப்பின் உச்சிக்கே கொண்டுபோய் விடும்.

ஆனால் அவர்களிடமுள்ள இரண்டு விஷயங்கள் அவர்களின் வாழ்வில் விஷத்தைக் கலந்து விடுகின்றன. இந்த இரண்டு பழக்கங்களை பெரும்பாலான பெண்களிடம் பார்க்கலாம். முதலாவது, சின்ன ஒரு விஷயத்தை ஊதிப் பெரிதாக்கும் பழக்கம் நம் பெண்களிடம் மிகுதமாகக் காணப்படும். அவளுக்கு பிடிக்காத ஒரு விஷயம் நடந்து விட்டால் போதும் அதைப் பெரிதாக்கி விடுவாள். மாமியார் ஏதாவது சொல்லி விட்டால், அல்லது நாத்தனார் ஏதாவது கூறிவிட்டால் அங்கே பெரிய நாடகமே நடத்திவிடுவாள். இப்படி ஒரு விஷயத்தை ஊதிப் பெரிதாக்குவது மிக மோசமான பழக்கமாகும்.

இரண்டாவது விஷயம், யாராவது ஒரு தவறு செய்து விட்டால் ஓரிரு வருடங்கள் உருண்டோடிய பின்னரும் ஏதாவது நடந்து விட்டால் மரித்து மக்கிப் போன விஷயத்தைத் தோண்டி எடுத்துப் போசுவாள். எந்த ஒன்றையும் மறந்து விடாமல் மனதில் வைத்துக் கொண்டு பேசுவாள். அதை வைத்து நாத்தனாரை, தாயை, கணவனை என்று எந்த வித்தியாசமும் இல்லாமல் குத்திப் பேசுவாள். இப்படி மரித்து மக்கிப்போனதை தோண்டி எடுத்துப் பேசுவது மிகக் கெட்ட பழக்கமாகும்.

உண்மையான விஷயம் என்னவென்றால் நமது முஸ்லிம் பெண்களிடம் 1. ஊதிப் பெரிதாக்கும் குணமும், 2. மரித்து மண்ணாகிப் போனதைக் கிளறிவிடும் பழக்கமும் அதாவது தவறாகப் பேசும்

பழக்கமும் மட்டும் இல்லாமல் இருந்தால் எனது கருத்துப்படி நம் பெண்கள் இன்றும் சுவனக் கன்னிகளை விடச் சிறந்தவர்களே.

நமது பெண்கள் தங்கள் பிள்ளைகளுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொள்வதைப் பார்க்கும் போது அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துகிறேன். கணவன் எவ்வளவு தீய குணமுள்ளவனாக இருந்தாலும் இங்கும் அங்கும் பார்க்காமல் தனது பார்வையை அவன் மீதே குவித்து வைத்திருக்கிறாளே, அதைப் பார்க்கும் பொழுது நான் நன்றி செலுத்துவேன்.

பெரும் குழப்பங்கள் நிகழும் போது முஸல்லாவில் அமர்ந்து தன் ரப்பிடம் தீர்வைத் தேடுகிறாளே, யா அல்லாஹ் என் கணவனைச் சீர் செய்து விடு என்று இறைஞ்சுகிறாளே, அதைப் பார்க்கும் பொழுதும் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவேன். நமது இஸ்லாமியப் பெண்களிடம் எண்ணிச் சொல்ல முடியாத நற்குணங்கள் பல புதைந்துள்ளன. அல்ஹம்துலில்லாஹ்..!

என்றாலும் அவள் பொடுபோக்காக இருக்கும் பொழுது அவளிடம் தவறான எண்ணம், தீய பேச்சு, பாதை மாறுதல் போன்ற தீயகுணங்களும் குடியேறி விடுகின்றன. எனவே பெண்கள் கவனமாக இவற்றைக் களைந்து விட்டு வீட்டிற்குள் தீன்தாரிப் பெண்ணாக வாழ முயல வேண்டும்.

நமது அனுபவத்தில் பார்த்து வருகிறோம், சில பெண்கள் நன்கு படித்துள்ளனர். ஆனால் அவர்களின் மூலம் கணவன்மார்களுக்கு மிகுந்த நிம்மதி, சந்தோஷம் கிடைப்பதற்கு பதிலாக கணவனுடன் வாக்குவாதம் செய்யும் பழக்கமே அவளிடம் அதிகமாகக் காணப்படுகிறது. ஆலிமான பெண்கள் பலர் தம் கணவருக்கு ஓதிப் பார்ப்பதையும் பார்க்கிறோம். இவர்கள் மார்க்கம் கற்றவர்களாக இருக்கின்றனரே தவிர, மார்க்கப் பற்றுள்ளவர்களாக இருப்பதில்லை. ஆமாம், இவள் தீனைக் கற்று ஆலிமா (பாஜிலா) பட்டம் வாங்கி விட்டாள். தீனை விளங்கிக் கொண்டாள், ஆனால், தீனை தன்னுள் கொண்டுவரவில்லை. மார்க்கத்தைத் தனதாக்கிக் கொள்ள முயலவில்லை. நமக்கு மார்க்கம் கற்றுள்ள மனைவிமார்கள் தேவையே இல்லை. மார்க்கப் பற்றுள்ள மனைவிமார்கள் தான் தேவை.

## 7. கணவனின் நன்றி மறவாதே

நாம் பரவலாகப் பார்த்து வருகிறோம். வாழ்க்கை தெளிந்த நீரோடையாக, அழகாக ஓடிக்கொண்டிருக்கிறது. அங்கே ஏதாவதொரு சிறு விஷயம் நடந்து விட்டால், உடனே நன்றி கெட்ட வார்த்தைகளை அள்ளி வீச ஆரம்பித்துவிடுகின்றனர். "ஆமாம்! நீங்கள் செய்வதெல்லாம் உங்கள் பிள்ளைகளுக்காகச் செய்கிறீர்கள். எனக்காக என்னத்த செஞ்சீங்க? நான் இந்த வீட்ல வந்து என்னத்த கண்டேன். எல்லாம் என் நஸீப்..! இதுபோன்ற வார்த்தைகள் பெண்களிடம் சர்வ சாதாரணமாகிவிட்டன. இதுபற்றி நபி மொழி ஒன்று எச்சரிக்கின்றது, நன்றிகெட்டதனத்தின் காரணமாக அல்லாஹுதஆலா அவள் செய்த அமல்கள் அனைத்தையும் அழித்துவிடுகிறான்.

ஒரு கிதாபில் வியப்புக்குரிய விசயம் ஒன்று படித்தேன், ஒரு ஆண் ஷிர்க் இணை வைத்தல் செய்தால் அதற்கு தண்டனையாக, "உனது நல்அமல்கள் அனைத்தும் அழிக்கப்பட்டுவிட்டன" என்று சொல்லப்படும். ஒரு ஆண் நபி (ஸல்) அவர்களின் விசயத்தில் கண்ணியக்குறைவாக நடந்து கொண்டால் "உனது நற்காரியங்கள் நாசமாகி விட்டன" என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் பெண்கள் விஷயத்தில் உன் கணவனிடம் நன்றிகெட்டத் தனமாக நடந்து கொண்டாலே நீ செய்த காரியங்கள் அழிந்துவிடும் என்று கூறப்பட்டுள்ளது.

ஒரு ஆலிம் நகைச்சுவையாகச் சொல்லுவார். "உன் கணவன் உனக்கு ஆடைகளெல்லாம் எப்படி வாங்கித் தருகிறான்" என்று ஒரு பெண்ணிடம் கேட்டால், "ஆமாங்க, நாலு கந்தல் துணி வாங்கித் தந்தார்" என்பாள். "வீட்டில் பாத்திரம் எப்படி வாங்கித்தந்துள்ளார்" என்று கேட்டால், "ஆமாம்! ஏதோ நாலு உடசல்களை வச்சிருக்கேன்" என்பாள். "சரி அப்ப சாப்பிட, குடிக்க வாங்கித் தருகிறாரா?" என்று கேட்டுப்பாருங்கள். "ஹா... என்ன செய்யறது, ஏதோ நாலு கவளங்கள்" என்பாள். இந்த அப்பாவிப் பெண் தன் நன்றிகெட்டத்தனத்தினால் பெரும் நஷ்டத்திற்கு ஆளாகிறாள். "மனிதர்களுக்கு நன்றி செலுத்தாதவன் தன் இறைவனுக்கும் நன்றி செலுத்த மாட்டான்" என்பது பெருமானார் (ஸல்) அவர்களின் பொன்மொழியாகும்.

பெண்களிடத்தில் இப்படி ஒரு கெட்ட பழக்கமும் அதிகமாகக் காணப்படுகிறது. அதாவது வீட்டில் இருக்கும் போது அழுக்கு மூட்டையாகச் சுற்றுவாள். வெளியில் கிளம்பி விட்டால் அலங்காரம் செய்து கொள்வாள். வீட்டில் வேலைக்காரியாகச் சுற்றுபவள், வெளியில் ஹூருள்ஈனாகக் காட்சியளிப்பாள். இது பெரியதொரு கெட்ட பழக்கம்! உலகத்தாரின் அன்பு, பிரியம், உங்களுக்குத் தேவையில்லை. கணவனின் காதல்தான் உங்களுக்குத் தேவை. எனவே பெண்களின் கடமைகளில் மிக முக்கியமான தலையாயக் கடமை கணவன் வாலிபனோ, வயோதிகனோ எப்படி இருந்தாலும் மனைவி வீட்டிற்குள் சுத்தமாக இருக்க வேண்டும். எப்போதும் மணப்பெண்ணாக காட்சியளிக்க வேண்டும் என்பது கட்டாயமில்லை. ஆனால் பரிசுத்தமாக இருப்பது ஒரு நல்ல பழக்கமாகும். அழுக்கு மூட்டையாக இருப்பவரை எல்லோரும் புறக்கணிப்பர். எனவே வீட்டில் சுத்தமாக இருந்து பழக வேண்டும். நற்குணங்களுடன், நற்பண்புகளுடன் இருக்க கற்றுக் கொள்ள வேண்டும்.

## 8. ஆண் ஏன் தடம் புரளுகிறான் ?

இந்த ஒரு புள்ளியில்தான் ஆண் தடம் புரண்டுவிடுகிறான். ஏனெனில் கணவன். ஏற்கனவே வேலை, அல்லது வியாபாரத்தின் காரணமாக பிரச்சனைகளோடு வருகிறான். வீட்டிற்குள் நுழைந்தால் அவனது மனைவி அழுக்கடைந்த, தொங்கிப் போன முகத்துடன் காணப்படுகிறாள். அவளைப் பார்க்கவே இவனுக்கு மனமில்லை. அதே கணவன் ஆபீஸுக்குச் செல்கிறான். அங்கே அவனுக்குக் குளித்துச் சுத்தமாகி, அழகிய ஆடையணிந்த அலுவலகப் பெண் சிரித்த முகத்துடன் காட்சியளிக்கிறாள். இப்பொழுது அவள் கருப்போ, சிவப்போ எப்படி இருந்தாலும், இந்தக் கணவனுக்கு அழகாகத் தெரிகிறாள். மேலும், வீட்டில் மனைவி சதா சண்டையிடுபவளாக இருக்க சங்கடப்பட்டவனாக வீட்டில் இருந்து வெளியான அவனுக்கு அலுவலகத்தில் தீய நடத்தையுள்ள பெண்ணின் முகம் பிடித்துப்போய் விடுகிறது. "சார்! இன்றைக்கு நீங்க ரொம்ப மன வருத்தத்தோடு இருக்கிறீர்கள்" என்ற வார்த்தை அவனை தடம்புரளச் செய்துவிடுகிறது. இந்த நடத்தை கெட்ட பெண்ணின் ஒரு வார்த்தை, மற்றொரு பெண்ணின் வாழ்வில் பெரும் புயல் வீசக் காரணமாகிறது.

எனவேதான், ஒரு பெண்ணின் உரிமையை மற்றொரு பெண்தான் கொள்ளையடிக்கிறாள் என்று மக்கள் சொல்கின்றனர். ஆனால் இப்படிக் கொள்ளையடிக்கப்பட்டதில் இவளுடைய தவறும் இருக்கிறது. இவள் எப்பொழுதும் வீட்டில் தன் கணவனுக்கு நிம்மதி, சந்தோஷங்களைத் தந்திருக்க வேண்டும். சுத்தமாகக் காட்சியளித்திருக்க வேண்டும். அவளிடம் கவர்ச்சி இருந்திருக்க வேண்டும். இவ்விசயங்களை இவள் புறக்கணித்து மற்றொரு பெண் பக்கம் கவனம் செலுத்த தன் கணவனுக்கு இவளே சந்தர்ப்பங்களை ஏற்படுத்தித் தந்திருக்கிறாள். இப்படி அழுக்குமூட்டையாக இருக்கும் பெண்கள் பாவம் பெரும்பாலும் கணவனுள்ள விதவைகளாகவே இருப்பர். ஏனெனில் அவள் கணவன் அவளைக் கண்டுகொள்ளவே மாட்டான்.

கொஞ்சம் புத்திசாலி பெண்கள் புரிந்து கொள்வார்கள். என்னுடைய உண்மையான எஜமானனை சந்தோஷப்படுத்துவதற்காக தொழுகையை நிறைவேற்றுவதும் மற்ற கட்டளைகளை பூர்த்தி செய்வதும் எப்படி என்மீது கடமையோ, அதே போல் என் கணவனைத் திருப்திப் படுத்துவதற்காக சுத்தமாக, அழகாக இருப்பதும் என் மீது கடமை. இவ்வாறு இவள் சுத்தமாக இருக்கிறாள். கண்குளிரக் காட்சியளிக்கிறாள். மேலே கணவனும் இவள் மீது திருப்தியாக இருக்கிறான் என்றால் அதைத்தான் 'நூருன் அலா நூர்' பிரகாசத்திற்குமேல் பிரகாசம் என்கிறோம். நீங்கள் சுத்தமாக, அழகாக இருக்கிறீர்கள். கணவனும் உங்கள் பக்கம் கவனம் செலுத்துகிறான் என்றால், உங்களுக்கு வேறென்ன தேவையிருக்கிறது!

எனவே எந்தப் பெண் சுத்தமாக அழகான குணத்துடன், மலர்ந்த முகத்துடன் கணவனை வரவேற்கப் பழகிக் கொள்வாளோ, அவள் எப்பொழுதும் கணவனின் கண்மணியாகிவிடுவாள். எனவே கொஞ்சம் அறிவையும் பயன்படுத்தப் பழகிக் கொள்ளுங்கள்.

### திசை மாறிய கணவனை மனைவிதான் திசை திருப்ப வேண்டும்.

இந்த அடியேனின் அனுபவம் என்னவென்றால், எந்தப் பெண்கள் "என் கணவன் என் பக்கம் திரும்புவதில்லை. பிள்ளைகளைக்

கவனிப்பதில்லை. என்னையும் கவனிப்பதில்லை" என்று அழுது கொண்டு திரிகிறார்களோ, அவர்களின் கணவனிடம் தவறு அதிகமிருந்தாலும் இந்தப் பெண்ணிடமும் ஏதாவது தவறு இருக்கத்தான் செய்யும். தன் கணவனை தன் பக்கம் நெருக்கமாக்கிக் கொள்வது எப்படி என்று சிந்திப்பதே இல்லை. புத்திசாலித்தனமாகச் செயல்படுவதும் இல்லை.

என் பக்கம் திரும்ப வேண்டியது கணவனின் கடமைதான் என்று நினைத்துக் கொள்கிறார்கள். அட ! உங்கள் பக்கம் கவனம் செலுத்த வேண்டியது கணவனின் கடமைதான் என்றாலும் துரதிருஷ்டவசமாக அவன் அப்படி இல்லையென்றால் அதற்கான சிகிச்சையை நீங்கள் தானே செய்யவேண்டும். இதற்காக உங்கள் பக்கத்து வீட்டுப்பெண்ணா வந்து சிகிச்சை செய்வாள்? அல்லது யாராவது உறவுப் பெண் வந்து சிகிச்சை செய்வாளா? அல்லது அலுவலகத்தில் பணிபுரியும் இளம்பெண் வந்து சிகிச்சை செய்வாளா?

வீட்டில் ஒரு வியாதி, அல்லது பிரச்சனை வந்து விட்டால் சிகிச்சையும் நீங்கள் தான் செய்யவேண்டும். நீங்கள்தான் கட்டுப்போட வேண்டும். அப்பொழுதுதான் காயம் குணமாகும். இந்தப் பிரிவினையை நீங்கள் தான் நெருக்கமாக மாற்றவேண்டும். இது உங்களின் கடமைதான். அல்லாஹுதஆலா உங்களுக்கு வழங்கியுள்ள மூளையைக் கொஞ்சம் கசக்குங்கள். எந்தெந்த வழிகளில் தன் கணவனை தன் பக்கம் நெருக்கமாக்குவது என்று கொஞ்சம் யோசியுங்கள்.

கணவர் இந்த வார்த்தையைச் சொல்லி விட்டாரே... அவர்கள் இப்படி பேசிவிட்டார்களே... இவர்கள் இப்படி சொல்லிவிட்டார்களே... என்றெல்லாம் யோசித்து யோசித்து கவலைப்படுவதற்கு பதிலாக நான் என் கணவனின் மனதை எப்படி வெல்வது என்பது பற்றி நீங்கள் ஏன் சிந்திப்பதில்லை?

உதாரணத்திற்குப் பாருங்கள்! ஒரு பெண்ணுக்குத் தன் கணவன் வெளியில் தவறான தொடர்பு வைத்திருப்பதாகச் சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. (அல்லாஹ் பாதுகாப்பானாக) இப்பொழுது அதைச்

சமாளிக்க இரு வழிகள் உள்ளன. ஒன்று, தன் அன்பு, பிரியத்தால் மற்ற எவரின் பக்கமும் திரும்பிப் பார்க்கக் கூட சந்தர்ப்பம் கிடைக்காதவாறு தன் கணவனைத் தன் பக்கம் நெருக்கமாக்கிக் கொள்ள முயற்சி செய்வது. மற்றொன்று கணவனுடன் நேரடியாகச் சண்டையிட ஆரம்பிப்பது. பெரும்பாலான பெண்கள் புத்திசாலித்தனமாகச் செயல்படாமல் இப்படித்தான் நேரடியாகச் சண்டையிட ஆரம்பித்து பிரச்சனையை இடியாப்பச் சிக்கலாக மாற்றிவிடுகின்றனர்.

கேளுங்கள், உள்ளத்தின் காதைத் திறந்து சற்று கவனமாகக் கேளுங்கள், கப்பலின் அடிப்பாகத்தில் ஓட்டை இருப்பதாகத் தெரிந்து விட்டது என்றால் அந்த ஓட்டையெப்படி உருவானது என்று தீர்க்கமாக ஆய்வுசெய்வதை விட்டுவிட்டு முதலில் அதை அடைக்க முயற்சி செய்ய வேண்டும். அதே போல்தான் கணவனின் செயல்பாடுகள் எனும் கப்பலில் ஓட்டை விழுந்து விட்டது என்றால் இந்த ஓட்டை எப்படி வந்தது? ஏன் வந்தது? யார் காரணம்? என்று கேட்டு சண்டையிடுவதற்குப் பதிலாக முதலில் அந்தக் கப்பல் மூழ்கிப்போவதற்கு முன்னால் அவ்வோட்டையை அடைக்க முயலுங்கள்.

அந்த ஓட்டையை அடைப்பதற்கு வழி என்னவென்றால், மனைவி முன்பை விட அதிகமான அன்பை அள்ளித்தர ஆரம்பித்துவிட்டால் கணவனின் மனம் வெளியில் அலையாமல் வீட்டிற்குள்ளேயே தேங்கி விடும். ஓர் அபாயத்தை சரியான நேரத்தில் உணர்ந்துவிட்டாலே அந்த அபாயத்தை முடிந்தளவு தடுத்துவிடலாம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

## 9. கணவனின் உள்ளத்தைத் தொடும் சமயோசிதப் பேச்சு

புத்திசாலி மனைவிமார்கள் எப்பொழுதும் கணவனின் மனதை வென்றுவிடுவார்கள். சந்தர்ப்ப, சூழ்நிலைக்குத் தக்கவாறு கணவனின் மனதில் பதியும்படியாக அழகாகப் பேசுவார்கள். அரபிக் கவிஞர் ஒருவர் தன் மனம் கவர்ந்தவளின் பேச்சை இவ்வாறு வர்ணனை செய்கிறார். "சல்மாவின் வார்த்தைகள் அறுந்து போன மாலையின் முத்துக்களைப் போன்று சிதறிவிழுகின்றன". அதாவது, அவருக்கு அவளது பேச்சுக்கள் மாலையிலிருந்து உதிரும் முத்துக்களைப் போன்று இருக்கின்றதாம்.

ஹாரூன் ரஷீத் (ரஹ்) ஒரு முறை சாப்பிட்டு முடித்தார்கள், சிறிது நேரம் காலாற நடக்கலாமே என்ற எண்ணம் தோன்றியது, "பௌர்ணமி இரவில் சிறிது நேரம் காலாற நடந்து விட்டு வரலாம்" என்று மனைவியை அழைத்தார். அதற்கு அவரது மனைவி, "அமீருல் முஃமீனின் அவர்களே! தாங்கள் சக்களத்திகள் இருவரை ஒன்றாக இணைத்து வைத்து சந்தோஷமாக இருக்க முடியுமா?" என்று கேட்டார். "என்ன சொல்கிறாய்?" என்று ஹாரூன் ரஷீத் (ரஹ்) அவர்கள் கேட்டார்கள். "ஒரு பக்கம் எனது முகம். மறுபக்கம் இலங்கிக் கொண்டிருக்கும் சந்திரன். இந்த இரண்டு சக்களத்திகளையும் ஒன்றிணைக்க முயற்சி செய்கிறீர்களா?" என்று கூறினார். இந்த வார்த்தைகளைக் கேட்ட ஹாரூன் ரஷீத் (ரஹ்) அவர்களுக்கு பெரும் மகிழ்ச்சி உண்டானது.

இவ்வாறு மனைவி புத்திசாலித்தனமாகப் பேசும்போது கணவனின் உள்ளத்தில் அவள் மீதுள்ள அன்பு பன்மடங்காகப் பெருகுகிறது.

ஒரு முறை ஹாரூன் ரஷீத் (ரஹ்) அவர்கள் தன் மனைவியிடம், "அங்கே பார்! சூரிய கிரகணம் ஏற்பட்டுள்ளது" என்று கூறினார். உடனே அவரது மனைவி, "உண்மையென்ன தெரியுமா? என் அழகைப்பார்த்த சூரியன் உருகிவிட்டது. பிறகு பர்தா போட்டுக்கொண்டது. அதுதான் இன்று சூரியகிரகணமாகக் காட்சியளிக்கிறது" என்று கூறினார். இங்கே பாருங்கள்! இவை சில வார்த்தைகள் தான் ஆனால் இந்த வார்த்தைகள் தான் பிறரின் மனதை மகிழ்வித்துவிடுகின்றன.

ஒரு முறை பாரசீகத்தின் பெரும் கவிக்குயிலான இளவரசி ஜைபுன்னிஸா மக்ஃபி ஒரு பூங்காவில் உலாவிக்கொண்டிருந்தார். அங்கே அவளது வருங்காலக் கணவன் ஆக்கில்கானும் எங்கிருந்தோ வந்து சேர்ந்து விட்டான். இவளைப் பார்த்ததும் அவன், சில மலர்களைப் பறித்து பூச்செண்டாக்கி இவளுக்கு முன்னால் அன்பளிப்பாகச் சமர்ப்பித்தான். ஜைபுன்னிஸா பெரும் கவிக்குயிலாக இருந்ததால் அந்த மலர்ச்செண்டைப் பார்த்ததும்

بگو اے عاشق صادق چرا گلدستہ آوردی    دل بلبل شکستہ زہر ما گلدستہ آوردی என் உண்மைக் காதலனே! இந்தப் பூச்செண்டைக் கொடுத்து என் மனதைக்

மகிழ்வித்து விட்டாய்". ஆனால், இந்த மலர்களைப் பறித்து குயில்களின் மனதை கொன்று விட்டாயே, என்று கூறினாள்.

பாருங்கள், அவள் அபூர்வமான இந்த வார்த்தைகளால் அவனது மனதை வருடியிருக்கிறாள். காதலனே, பூச்செண்டைக் கொடுத்து என் மனதை சந்தோஷப்படுத்திவிட்டாய். ஆனால் குயில்களின் மனதையல்லவா நோகடித்துவிட்டாய் என்றாள்.

ஆக்கில்கானும் ஒரு மகா கவியாக இருந்தான்

برائے زینت دستک نہ ایں گلدستہ آوردم بخوبی با توی زد گل چشک بستہ آوردم

மென்மையானவளே! உன் கைகளை அலங்கரிப்பதற்காக இந்தப் பூச்செண்டை நான் கொண்டு வரவில்லை, நீ இருக்கும் போதே இந்தப் பூக்கள் தங்களது அழகைக் காட்டி பெருமையடித்துக் கொண்டிருக்கின்றனவே! எனவேதான் அவற்றைக் கைது செய்து உன் முன் நிறுத்துகிறேன்" என்றான்.

இப்பொழுது பாருங்கள். இவை சில வார்த்தைகள்தான் ஆனால் அவ்வார்த்தைகள் அவனது உள்ளத்தை எவ்வளவு நெருடியிருக்கும். எனவே, பெண்கள் தமது அறிவைக் கொஞ்சம் பயன்படுத்த வேண்டும். இறைவன் இதற்காகத்தான் அறிவைக்கொடுத்துள்ளான்.

அவகாசம் கிடைக்கும்போது கணவனை எப்படிச் சமாளிப்பது, அல்லது கணவனுக்கு என்புறத்திலிருந்து என்ன கொடுப்பது என்று யோசித்துப்பாருங்கள்.

ஹாரூன் ரஷீத் (ரஹ்) அவர்களுடைய மனைவிமார்களில் ஒருத்தி மிகமிக அழகாக இருந்தாள். ஆனால் எந்த ஆபரணத்தையும் அணியவே மாட்டாள். ஒருமுறை ஹாரூன் ரஷீத் (ரஹ்) அவர்கள் அவளிடம், "மற்றவர்கள் ஆபரணங்கள் அணிவதில் பெரும் ஆர்வம் காட்டுகின்றனர். ஆனால் உன் பொன்னுடலில் அவ்வளவு நகைகள் காணப்படுவதில்லையே" என்று கேட்டார்கள். அதற்கு அவள் சொன்னாள், "விஷயம் என்ன தெரியுமா? உங்களுடைய மற்ற மனைவிமார்கள் அந்த நகைகளை வைத்துதான் தமது அழகை மெருகேற்றிக் காட்டுகிறார்கள். ஆனால் எனக்கு அல்லாஹ்தஆலா

இயற்கையிலேயே பெரும் அழகைக் கொடுத்துள்ளான். நகைகளை விட்டும் என்னைத் தேவையற்றவளாக ஆக்கியிருக்கிறான்".

ஒரு முறை கலீஃபா ஹாரூன் ரஷீத் (ரஹ்) அவர்கள் தம் மனைவியின் மடியைத் தலையணையாக்கிப் படுத்துறங்கிவிட்டார்கள். சிறிது நேரம் கழித்து எழுந்து பார்த்தால் அவர்களின் தலை தலையணை மீது இருந்தது. மனைவி ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தாள். கலீஃபாவுக்குக் கோபம் வந்துவிட்டது. "நீ ஏன் எழுந்து சென்று விட்டாய்" என்று கோபமாகக் கேட்டார். அதற்கு அவள், "அமீருல் முஃமினீன் அவர்களே! என் மடியில் தலைவைத்துத் தூங்கினீர்கள். நான் ஒரு பெண். பலவீனமானவள். சிறிது நேரத்தில் களைத்துப்போய் அல்லது கால்களை அசைத்து உங்கள் தூக்கத்தைக் கெடுத்துவிடுவேன். எனவே நீங்கள் நிம்மதியாகத் தூங்க வேண்டும் என்பதற்காகத் தலையணைமீது உறங்கச் செய்தேன்" என்று பதிலளித்தார்.

இவ்வாறு பேச்சிற்கும் ஓர் அழகிய பாணி தேவைப்படுகிறது. சவுந்தர்யமான பெண்ணே! உனக்கு அல்லாஹ் அழகை வாரிவழங்கியிருக்கிறான். இப்பொழுது நீ உன் தீய பேச்சுக்களால் உன் முகத்தைக் கோரமாக்கிக் கொள்ளாதே!

அழகற்ற பெண்ணே! அல்லாஹ் உனக்கு அழகென்னும் பரிசைத் தரவில்லை. என்றாலும் உன் தீய வார்த்தைகளால் உன்னுள்ளே, மற்றொரு குறையை உருவாக்கிக் கொள்ளாதே.

## 10. வழியனுப்பும் வரவேற்கும் நிமிடங்கள்

மிகமிக முக்கியமான ஒரு விஷயம், சில பெண்கள் தான் அதைக் கடைபிடிக்கின்றனர். பலரோ அதனைக் கண்டுகொள்வதே இல்லை. அது என்னவென்றால் கணவனை வரவேற்பதும் வழியனுப்புவதுமாகும்.

கணவன் வீட்டை விட்டுப் புறப்படும்போது, நல்ல மனைவியானவள் எப்பொழுதும் வீட்டு வாசல் வரை வந்து நன்னம்பிக்கையின் வார்த்தைகள் மேலும் நல்ல துஆக்களுடன் அவனை அனுப்பி வைப்பாள். கடைசி நிமிடங்களில் அவள் சிந்தும் புன்னகை அன்றைய நாள் முழுவதும் கணவனின் ஞாபகத் திரையில் உலாவந்து கொண்டிருக்கும்.

இதே போல் எவ்வளவு பெரிய வேலையில் ஈடுபட்டிருந்த போதிலும், கணவன் வீட்டிற்கு வரும்போது வேலைகளை உதறித்தள்ளி விட்டு, சில நிமிடங்களுக்காக தன்னைத் தயார்படுத்திக் கொண்டு சிரித்த முகத்துடன் தன் கணவனுக்கு சலாம் கூறவேண்டும். இது கணவனின் வெளிப்பிரச்சனைகள் அனைத்திற்கும் ஒத்தடமாக அமையும். இந்த வரவேற்றலும் வழியனுப்புதலும் இல்லற வாழ்வில் ஒரு பெண் கடைபிடிக்க வேண்டிய வாஜிபான காரியம் என்று கருதுங்கள்.

அரபுலகில் சில பெண்களிடம் "தம் கணவரை வழியனுப்பும் போது என்ன கூறுவீர்கள்?" என்று கேட்கப்பட்டது. பலரும் பலதரப்பட்ட வாசகங்களைக் கூறினர். ஒரு பெண் கூறினாள், நான் في امان الله في حفظ الله "அல்லாஹ்வின் பாதுகாப்பில் சென்று வாருங்கள் என்று கூறி அனுப்பி வைப்பேன்" என்றாள்.

இரண்டாமவள் நான் يا رب اعده لي سريعا وسالما "இறைவா! அவரை சலாமத்துடன் விரைவாக என்னிடம் திருப்பி அனுப்பி வை என்று துஆ செய்வேன்" என்றாள்.

மூன்றாம் ஒரு பெண் يا رب احفظه لي زوجا صالحا "யா அல்லாஹ்! அவரைப் பாதுகாத்திடுவாயாக! அவர் ஒரு முன்மாதிரிக் கணவர், என் குழந்தைகளுக்குக் கிடைத்த முன் மாதிரியான தந்தை என்று கூறி அனுப்பி வைப்பேன்" என்றாள்.

மேலும் ஒரு பெண், "நான் என் கணவரை வழியனுப்பும் போது متى سيعود لي ثانية இந்த பொன் வதனத்தைப் பார்க்கும் பாக்கியம் அடுத்து எப்பொழுது கிடைக்கும் என்று கூறுவேன்" என்றாள். மற்றொரு பெண் கூறினாள், நான் வழியனுப்பும் போது اتق الله فينا ولا تطعمنا الا حلالا "எங்கள் விஷயத்தில் அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள் எங்களுக்காக ஹலாலான உணவைத் தேடித் தாருங்கள் என்று கூறுவேன்" என்றாள்.

நம் பெண்கள் தம் கணவனுக்கு இவ்வகையான செய்திகளைச் சொல்லியனுப்புகிறார்களா? கணவன் எப்பொழுது தயாராகி புறப்பட்டுச் சென்றான்? எப்பொழுது வீடு திரும்புவான் என்பது கூட இவர்களுக்குத் தெரிவதில்லையே!

நினைவில் கொள்ளுங்கள்! நம்மவர்களிடம் ஏதாவது தவறு ஏற்படுகிறது என்றால் அதில் நம் புறத்திலிருந்தும் ஏதாவது தவறு ஏற்பட்டிருக்கும். கணவன் உங்கள் பக்கம் கவனம் செலுத்தவில்லை என்றால் அங்கே கொஞ்சமாவது உங்களுடைய தவறும் இருக்கிறது என்றுதான் அர்த்தமாகிறது. கணவனுடைய தவறு அதிகம்தான், ஒத்துக்கொள்கிறேன். ஆனால் உங்களிடமும் கொஞ்சமாவது தவறு இருக்கிறதல்லவா?

## 11. கணவனை கவர்ந்திழுக்க சில ஆயுதங்கள்

கணவனின் மனதில் அன்பை விதைக்க பயனுள்ள சில விஷயங்கள் இருக்கின்றன. அதாவது, கணவனை தன் மீது காதல் வயப்பட்டவனாக ஆக்குவதற்கு பிரத்தியேகமான சில ஆயுதங்களை அல்லாஹு‘தஆலா பெண்ணினத்திற்கு வழங்கியிருக்கிறான். இப்பொழுது இந்த ஆயுதங்களை பயன்படுத்தும் கலையை அறிந்திருப்பதும் அறியாமலிருப்பதும் ஒவ்வொரு பெண்ணின் திறமையைப் பொருத்தது.

கணவனின் மனம் பூட்டுப் போடப்பட்டிருந்தாலும் இந்தச் சாவிகள் அந்தப் பூட்டை இலகுவாக திறந்துவிடும். எனவே கொஞ்சம் கவனமாகக் கேளுங்கள்.

### 1. கண்களெனும் ஆயுதம்

முதன் முதலாக மனிதனுடைய கண்கள். இதை வைத்து ஒரு பெண் தன் கணவனின் பூட்டப்பட்ட மனக்கதவைத் திறந்து விட முடியும். இவை அப்படிப்பட்ட சாவிகள். சிரிக்கும் கண்கள் எப்பொழுதும் பிறரின் மனதைக் கொள்ளையடித்துவிடும். பிறருக்கு பிரியத்தின் அழைப்புக் கொடுக்கும். எனவே நீங்கள் எப்பொழுதும் தன் கணவரை மென்மையான பார்வையால் பாருங்கள். நீங்கள் நோக்கத்தைப் புரிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

எப்பொழுதும் தன் கணவனை மென்மையான பார்வையால் பாருங்கள். நீங்கள் அப்படிப் பார்க்கும் போது "நான் உங்களுக்கு சமர்ப்பணமாக இருக்கிறேன்" என்று உங்கள் கண்கள் சொல்வதை

உங்கள் கணவர் புரிந்துகொள்வார். நீங்கள் இப்படி பிரியம் நிறைந்த பார்வையால் பார்க்கும்போது நான் உங்களுக்கு சமர்ப்பணம் என்று உங்கள் கண்கள் பேசும்போது நிச்சயமாக உங்கள் கணவனின் மனதில் உங்களுக்காக காதலெனும் விதை விதைக்கப்படும்.

## 2. பேச்சென்னும் ஆயுதம்

இதே போல் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கேற்ப பிரியம் நிறைந்த பேச்சுக்கள் பேசுவது கணவனின் உள்ளத்தில் உறங்கிக் கிடக்கும் உணர்வலைகளை உசுப்பிவிடும். கணவனின் மனப்பூட்டுக்களைத் திறந்து விடும்.

மேற்கத்திய பெண்களைப்பார்க்கிறோம். தன் கணவனுடன் அன்பு, பிரியத்தின் உணர்வுகளை வெளிப்படுத்தும் விஷயத்தில் எல்லை கடந்து பேசுகின்றனர். ஆனால், நமது முஸ்லிம் பெண்களோ இவ்விஷயத்தில் எல்லை மீறிய கஞ்சத்தனம் செய்கின்றனர். இவ்விரண்டுமே மிதமிஞ்சிய போக்குகளாகும்.

அங்கே அவள், கேட்கின்றவர் கூச்சத்தால் தலைகுனிந்து விடுமளவு அப்பட்டமாகப் பேசுகிறாள். இங்கே நமது இளம்பெண்களோ, கணவனுடன் பேசவே கூச்சப்படும் Reserve ஆக இருக்கிறார்கள். இதுவும் பெரிய தவறுதான். அவளுக்குள்ளே இருக்கும் Feelings (உணர்வலைகளை) அவள் வெளிப்படுத்தத் தெரியாமல் தவிக்கிறாள்.

எந்த பெண் (Expressive) பேசும் திறனில்லாதவளாக இருப்பாளோ அவளது வாழ்வு சந்தோஷம் நிறைந்ததாக இருக்க முடியாது என்பதை மறந்துவிடாதீர்கள். முழு உலகிற்கும் அவள் ஊமையாகி விடுவாள்.

எனவேதான் கணவனுக்கு முன்னால் தன் உணர்வுகளை எடுத்துரைக்க வேண்டும். உதாரணத்திற்கு பாருங்கள். எப்பொழுதாவது உங்கள் கணவர் குழப்பமான நிலையில் காணப்படுகிறார். அப்பொழுது "ஏன் எங்கள் எஜமானன் மௌனமாக காட்சியளிக்கிறார்?" என்று கேளுங்கள். இந்த மௌனமான நிலையில் நீங்கள் புன்னகைக்கும் பார்வையுடன் சந்தோஷமாக பார்க்கும் போது உங்களது இந்த ஒரு

வார்த்தை உங்களது கணவனின் குழப்பமான சூழ்நிலையை மறையச் செய்துவிடும்.

இதேபோல் எப்பொழுதாவது "உங்களைப் பார்க்காத வரை மனதுக்கு நிம்மதி கிடைப்பதே இல்லை" என்று சொல்லுங்கள். இது சிறிய வாசகம் தான். ஆனால் உங்கள் கணவனின் மனதில் அன்பின் புயல் காற்றையே வீசச் செய்துவிடும்.

கணவர் பிரயாணத்திலிருந்து திரும்பி வந்திருக்கும் போது, நீங்கள் உங்களுடைய பிரியமான நிமிடங்களில் அவரிடம் "ஆமாங்க பகல் நேரம் கூட அந்த வேலை இந்த வேலை என்று எப்படியாவது கழிந்து விடுகிறது. இரவு நேரம் கழிவதுதான் பெரிய சிரமமாக இருக்கிறது. சிலருடைய இரவு அழுகையில் கழியுமாம், சிலருடைய இரவு தூக்கத்தில் கழியுமாம். ஆனால் என்னுடைய இரவு அழுகையிலும் கழியவில்லை, தூக்கத்திலும் கழியவில்லை உங்களுடைய ஞாபகத்தில்தான் கழிந்தது" என்று சொல்லுங்கள்.

நீங்கள் இது போன்ற வார்த்தைகளைக் கூறிவிட்டால் இந்தவார்த்தைகள் உங்கள் கணவனின் மனதை எட்டு திசையிலிருந்தும் பிடித்திழுத்து உங்களோடு மட்டும் ஒட்ட வைத்துவிடும்.

எப்பொழுதாவது கணவன் உங்களை அழைத்தால், "இதோ..! ஆஜராக இருக்கிறேன்" என்று கூறுங்கள். ஆக, பிறருக்கு பிரியத்தின் செய்தியை எத்திவைக்கும் வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும். இது மனைவிமார்களுக்கு மிகமிக அவசியமான ஒன்று.

ஆக, சிரிக்கும் இரு கண்களும் உங்களிடமுள்ள சாவிகளாகும். உங்களது நாவும் ஒரு சாவியாகும், இனிப்பான வார்த்தைகளைப் பேசி கணவனின் மனதை வெல்லுங்கள்.

### 3. நறுமணம் பயன்படுத்துதல்

இதேபோல் நறுமணங்களைப் பயன்படுத்துவதும் உங்களிடமுள்ள ஒரு சாவியாகும். ஆண், பெண் இரு பாலருக்கும் நறுமணத்தின் மீத ஈர்ப்பு இருப்பது இயற்கை. நமது நபி (ஸல்) அவர்கள் நறுமணத்தை அதிகம் விரும்புவார்கள். முழு உலகிலும் மனிதர்கள் இயற்கையாகவே நறுமணத்தைப் பிரியப்படுகிறார்கள்.

எனவே, நீங்களும் நல்ல நறுமணத்தைப் பயன்படுத்தப் பழகிக் கொள்ளுங்கள். கணவர் அதை நுகரும் போது உங்கள் மீது பிரியத்தைக் காட்டுவார். நறுமணத்தை நுகரும் போது மனிதனின் மனதில் அன்பின் அலை வீசத் துவங்குகிறது. எனவே மனைவிமார்கள் அதிகம் பரவாத நறுமணத்தைப் பயன்படுத்த வேண்டும். கணவன் நெருங்கி வரும் போது அவனது மனதை கொள்ளை கொள்வதாக மட்டும் இருக்க வேண்டும்.

### 4.கைகளெனும் சாவி

இரு கைகள், இவையும் சாவிகள் தான். நீங்கள் ஒரு சந்தர்ப்பத்தில் பேசிக்கொண்டிருக்கும் போது உங்கள் கையை கணவனின் கை மீது வையுங்கள். அல்லது கணவனின் தோளின் மீது போடுங்கள். இப்பொழுது உங்களது பேச்சு கணவன் மீது வேறுவிதமான பிரதிபலிப்பை ஏற்படுத்தும். இதில் ஒரு நெருக்கம், பிரியம் வரும். ஆக, கைகளும் அல்லாஹ்வின் மிகப்பெரும் அருட்கொடைதான்.

### 5.பிரியம் நிறைந்த முத்தம்

அடுத்து முத்தம் என்றொரு ஆயுதமுண்டு. ஹதீஸில் வருகிறது. "நீங்கள் உங்கள் மனைவியிடம் நெருங்க விரும்பினால் அதற்கு முன்னால் "தூது" அனுப்புங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்பொழுது ஸஹாபாக்கள், "அல்லாஹ்வின் தூதரே! "தூது" என்றால் என்ன?" என்று கேட்டனர். "முத்தம் தான் பிரியத்தின் தூதுவன்" என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். நீங்கள் உங்களுடைய மனைவியுடன் சேர விரும்பி அப்பொழுது முத்தம் கொடுத்தால் அங்கே ஓர் அழைப்புச் செய்தி கிடைத்துவிடும். உண்மையில் முத்தம் என்பது சொல்ல வேண்டிய அனைத்தையும் சொல்லாமல் சொல்லி விடும் ஓர் ஊமைத் தூதுவன்.

ஒரு கணவன் தன் முத்தத்தின் மூலமாக மனைவியின் உள்ளத்தை வெல்ல இயலாதவனாகி விட்டால், எந்த ஆயுதத்தைக் கொண்டும் அவளது உள்ளத்தை வெல்லவே முடியாது என்பதை மறந்து விடாதீர்கள் எனவே எப்பொழுதாவது உள்ளத்தில் கொஞ்சம் களங்கம்

தெரிகிறது; கொஞ்சம் வித்தியாசத்தை உணருகிறீர்கள் என்றால் அப்பொழுது அல்லாஹுதஆலா வழங்கியுள்ள இந்த நிஃமத் - அருட்கொடையைப் பயன்படுத்துங்கள். உங்கள் துணைக்கு உங்கள் அன்பின் தூதை அனுப்புங்கள்.

### 12. நிறைவேற்றுதல் எனும் தாவீஸ்

சில பெண்கள் தாவீஸைத் தேடி அலைகிறார்கள். பார்த்தீர்களா? "ஹஜ்ரத்! என் கணவர் என்னோடு பிரியமாக இருப்பதில்லை. ஏதாவது தாவீஸ் தாருங்கள்" என்று கேட்கின்றனர் இவர்களைப் பார்த்தால் எனக்கு பெரும் வியப்பு ஏற்படுகிறது. அதை விடப்பெரிய வியப்புக்குரிய விஷயம், இளம் வயது மனைவி, அல்லாஹ் அவளுக்கு அறிவு தந்துள்ளான். புத்தி தந்துள்ளான், படிப்பறிவு, நல்ல அழகு அனைத்தும் இருந்தும் தாவீஸ் கேட்கிறார்கள்.

நினைவில் கொள்ளுங்கள், ஒரு பெண் நன்னடத்தையும் புத்திசாலித் தனமும் உள்ளவளாக இருந்தால் அவளது ஒவ்வொரு செயலும் தாவீஸாக இருக்கும். அல்லாஹுதஆலா ஆணின் மனதை பெண்களின் பக்கம் ஈர்க்கப்படுவதாக வைத்துள்ளான். பெண்ணிடத்தில் ஆணை தன் பக்கம் ஈர்க்கும் காந்த சக்தியை வைத்துள்ளான். உங்களுக்கு அல்லாஹ் அழகிய நடவடிக்கைகள் என்னும் தாவீஸ் தந்துள்ளான். பேச்சுக்கள் என்னும் தாவீஸ் தந்துள்ளான். அந்த தாவீஸ்களை ஏன் பயன்படுத்துவதில்லை? இந்த காகித தாவீஸ்களின் பின்னால் ஏன் சுற்றித் திரிகிறீர்கள்?

விளைவு என்னவென்றால் களைத்துப்போய் கணவன் வீடு திரும்புகிறான். அங்கே மனைவியும் களைத்துப் போய் அமர்ந்திருக்கிறாள். இப்பொழுது களைத்துப் போனவன் களைத்துப் போன மனைவியிடம் என்ன சுகத்தைக் காண்பான்? எனவே, (Fresh) புத்துணர்ச்சியாக இருந்து பழகுங்கள். அவருக்கு முன்னால் அன்பான, பிரியமான வார்த்தைகளைப் பேசுங்கள். மலர்ந்த முகத்துடன் வரவேற்புச் செய்யுங்கள். பிறகு வீடுகளுக்குள்ளே சந்தோஷம் எப்படிப் பொங்குகிறது என்று பாருங்கள்.

## 13. கணவனைப் புகழ்வது ஸஹாபிப் பெண்களின் ஸுன்னத்தாகும்

மேலும் ஒரு விஷயத்தை மனதில் பதிய வைத்துக் கொள்ளுங்கள். அதாவது கணவனைப் புகழ்வது ஒரு சாதாரணமான செயலல்ல, மாறாக அது மிகப்பெரிய நற்காரியம். ஸஹாபிப் பெண்களின் ஸுன்னத். அவர்கள் தங்களுடைய கணவன்மார்களைப் புகழ்ந்து பேசுவார்கள்.

ஒருவருடைய நல்ல காரியங்களைப் புகழ்ந்துரைக்கும் போது அவர் தமது தவறான காரியங்களையும் நல்லவையாக்க முயற்சி செய்வார் என்பது தெளிவான விஷயம். ஆனால், உங்கள் நாவிலிருந்து கணவனைப் பற்றிய புகழ் வார்த்தைகள் வருவதை உங்களால் தாங்கிக் கொள்ள முடிவதில்லையே! இவ்விஷயத்தை நாம் பல முறை ஆய்வு செய்திருக்கிறோம். கணவனைப் புகழும் விஷயத்தில் பெண்களின் நாவு ஊமையாகி விடுகிறது.

ஸய்யிதா ஆயிஷா (ரலி-அன்ஹா) நபி (ஸல்) அவர்களை எப்படியெல்லாம் புகழ்கிறார்கள் என்று கேளுங்கள். நமக்கு வியப்பு மேலிடுகிறது. அவர்கள் நபி (ஸல்) அவர்களைப் பற்றி கவி பாடுகிறார்கள்.

لنا شمسٌ وللآفاقِ شمسٌ وشمسي خيرٌ من شمسِ السماء

ஆகாயத்திற்கும் ஒரு சூரியனிருக்கிறது. எங்களிடமும் ஒரு சூரியனிருக்கிறது.

ஆகாயத்து சூரியனை விட என்னுடைய சூரியன் எல்லா வகையிலும் மேன்மையானது.

فإنّ الشمسَ تطلعُ بعد الفجر وشمسي تطلعُ بعد العشاء

ஆகாய சூரியனோ ஃபஜ்ருக்குப்பிறகு உதயமாகும்

ஆனால் என்னுடைய சூரியன் இஷாவிற்குப் பிறகு உதயமாகும்.

மனைவி அன்பிற்கினிய இந்த வார்த்தைகளால் கணவனைப் புகழ்ந்த பிறகும் புத்தியுள்ள ஒரு கணவன் தன் மனைவிக்கு அன்பை வாரி வழங்காமல் இருப்பானா? நீங்களே சொல்லுங்கள்.

அன்னை ஆயிஷா (ரலி-அன்ஹா) மேலும் கூறுகிறார்கள்.

لَوَامِيْ زُلَيْخَا لو رَأَيْنَ حَبِيْبَنَا لأثَرْنَ بقطْعِ القُلُوْبِ عَلَى اليَدِ

ஜுலைகா அம்மையாரை பழித்துக் கூறிய (பிறகு ஹஜ்ரத் யூஸுஃப் (அலை) அவர்களைப் பார்த்து கத்தியால் கைகளை வெட்டிக் கொண்ட) பெண்கள் எங்களுடைய நேசர் (ஸல்) அவர்களைப் பார்ப்பார்களேயானால் கைகளுக்குப் பகரமாக தங்கள் இதயங்களையே துண்டு துண்டாக வெட்டிக் கொண்டிருப்பார்கள்.

இப்பொழுது கூறுங்கள், நீங்கள் உங்கள் கணவனைப் புகழ்ந்து ஒரு வார்த்தை பேசியிருக்கிறீர்களா? ஒரு கவிதை சொல்லியிருக்கிறீர்களா?

அல்லாஹுதஆலா நாவைக் கொடுத்திருக்கிறானே..! எதற்காக? தன்னைப் புகழ்ந்து துதிப்பதற்காகவும், தன் நேசர் (ஸல்) மீது ஸலவாத்துச் சொல்வதற்காகவும் பிறகு தனது உபகாரியான தன் கணவனைப் புகழவும் அவருக்கு நன்றி செலுத்துவதற்காகவும் தான் தந்திருக்கிறான். இந்தக் காரியத்தைச் செய்யவில்லை என்றால் பிறகு என் கணவர் என்னைக் கவனிப்பதே இல்லை என்று ஏன் புலம்புகிறீர்கள்?

வெளியில் அன்னியப் பெண்ணொருத்தி இரு வார்த்தைகளைக் கூறி உங்களுடைய வாழ்க்கையையே கொள்ளையடித்துச் சென்றுவிடக் கூடும். எனவே தன் கணவனைப் பாவங்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். வீட்டிற்குள்ளேயே அவருக்கு அன்பை, பிரியத்தை வழங்குங்கள். இந்த அன்பைத் தேடி அவர் தெருக்களிலும், கடை வீதிகளிலும் அலையக் கூடிய நிலை வந்து விடக்கூடாது. அல்லாஹ் பாதுகாப்பானாக! ஆமீன் !

## 14. கணவனின் தேவையை நிறைவேற்ற மறுப்புத் தெரிவிக்கக் கூடாது.

கடைசி விஷயம் மிகமிக முக்கியமான விஷயம். அதுவும் ஷரீஅத் கூறுகிறது. கணவனுக்குத் தன் மனைவியுடன் சேரும் ஆசை

ஏற்பட்டால், மனைவி சுத்தமாக இருக்கும் போது எப்பொழுதும் மறுப்புச் சொல்லக்கூடாது. மனைவி ஒட்டகத்தின் மீது சவாரி செய்து கொண்டிருந்தாலும் கீழே இறங்கி கணவனின் தேவையை பூர்த்திச் செய்ய வேண்டுமென்று ஒரு ஹதீஸ் கூறுகிறது.

மனைவி தன்னூர் - அடுப்பின் மீது நின்று வேலை செய்து கொண்டிருந்தாலும் பின்னே வந்து கணவனின் காரியத்தை முடித்துவிட்டுப் பிறகு சென்று வேலையில் ஈடுபட வேண்டுமென்று மற்றொரு நபிமொழி வலியுறுத்துகிறது.

ஆனால், இன்றைய பெண்கள் கணவன் தன் பேச்சைக் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதற்கு இதை ஒரு கருவியாக பயன்படுத்துகின்றனர். இது மிகப்பெரிய தவறு. ஒரு மனைவி தன் வாழ்நாளில் இதைவிட மட்டரகமான செயலை செய்யவே மாட்டாள். கணவன் நெருங்க ஆசைப்படுகிறான். ஆனால் மனைவி, "இல்லை இப்ப வேண்டாம்" என்று தூர விலகுகிறாள். இந்த விஷயங்கள் கணவனை நிம்மதியற்றவனாக்கிவிடும். பிறகு அவன் நிம்மதிக்காகப் பிறரைத் தேட ஆரம்பித்துவிடுவான்.

மனக்கவலையுடன் இச்சம்பவத்தைக் கூறுகிறேன். ஓர் ஆலிம் இருந்தார், நல்ல வியாபாரமிருந்தது. பல கோடிகளுக்கு அதிபதியாக இருந்தார். ஒரு நாள் எனக்கு முன்னால் வந்து நின்று கண்ணீர் விட்டு அழ ஆரம்பித்து விட்டார். "ஹஜ்ரத் ! ஷரீஅத்தை முழுமையாக கடைப்பிடித்து நடக்க ஆசைப்படுகிறேன். ஒரு கோடீஸ்வரனாக இருக்கிறேன். ஆனால், என் மனைவி சின்னஞ்சிறு விஷயங்களுக்காக முதுகைக் காட்டித் தூங்கிவிடுகிறாள். பல நாட்கள் இப்படியே கழிந்து விடுகின்றன. எனக்குத் தேவையென்று வாய்விட்டு சொல்லி விட்டேன். ஆனால், அவள் பேச்சைக் கேட்பதே இல்லை. இதை ஓர் ஆயுதமாகப் பயன்படுத்துகிறாள். இப்பொழுது தவறான பாதையில் போகும்படி மனம் தூண்டுகிறது என்று தேம்பினார்.

ஒரு மாதமாகிவிடுகிறது. மனைவி என்னை நெருங்க விடுவதில்லை. எனக்கும் இளம் வயது. நான் எப்படி என் பார்வையைப் பாதுகாக்க முடியும். நீங்கள் தான் எனக்கு தீர்வு சொல்ல வேண்டும்.

இரண்டாவது திருமணத்தை நான் விரும்பவில்லை. ஏனெனில் என் பெற்றோர் வருத்தப்படுகிறார்கள். ஆனால், மனைவி என்னைப் புரிந்து கொள்வதும் இல்லை என்றார்.

இப்பொழுது, இந்த கணவன் பாவத்தில் விழுந்து விட்டால், அந்த தவற்றிற்கான பாவத்தில், அவனுடைய மனைவிக்கும் சரிபங்கு கிடைக்குமல்லவா? நீங்களே சொல்லுங்கள். நாங்கள் கற்பொழுக்கத்தோடுதான் இருக்கிறோம், வீட்டில் தானே இருக்கிறோம் என்று கூறும் பெண்கள் யோசிக்க வேண்டாமா?

நீங்கள் உங்கள் கணவனை நெருங்கா விட்டால், மறுத்து விட்டால் முன்பின் செய்தால் உங்கள் கணவன் வெளியில் சென்று அன்னியப் பெண்ணின் மீது பார்வையைச் செலுத்தினால் கியாமத் நாளன்று உங்களது கழுத்திலும் கயிறு இறுக்கப்படும். நாம் உன்னை எதற்காகப் படைத்தோம்? இல்லற வாழ்வில் எதற்காக இணைத்தோம்? நீ எந்த நோய்க்கு மருந்தாக இருந்தாய்? நீ உன் கணவனின் தாகத்தைத் தணிக்கும் சக்தி பெற்றிருந்தாய். பிறகும் கணவனின் கடமையை நிறைவேற்றினாயா? என்று கேட்கப்படும்.

எனவே தான் நல்ல பெண்கள் தன் பொறுப்புகளை எப்பொழுதும் சரியாக நிறைவேற்றுவார்கள். தன் கணவனுக்கு வீட்டிற்குள் இப்படிப்பட்ட நிம்மதியை வழங்கிடுவார்கள். அதன் காரணமாக பிறரின் பக்கம் பார்வையைத் திருப்பும் தேவையே ஏற்படாது.

இப்பொழுது கூறிய விஷயங்கள் அனைத்தும் பெண்கள் விளங்க வேண்டியவைகள் தான். கணவன் ஒன்றுமே செய்யத் தேவையில்லை என்பது இதன் கருத்தல்ல ஆண்களின் சபைகளில் ஆண்களுக்குரிய விஷயங்கள் சொல்லப்படும்.

மனைவி என்பவள் கணவனின் வாழ்க்கையின் நிம்மதிக்காகவே அல்லாஹ்வின் புறத்திலிருந்து வழங்கப்பட்ட அழகான அன்பளிப்பாக இருக்கிறாள். அவள் நல்ல குணமுள்ளவளாக இருந்தால் பாலைவனத்தைச் சோலைவனமாக்கிவிடுவாள். பாழடைந்த வீட்டை அமைதி பூங்காவாக்கிவிடுவாள். அவளிடம் நன்னடைத்தையும் நற்குணமும் நிரம்பியிருந்தால் அவள் மணம் கமழும் மலராவாள்.

ஹழ்ரத் மௌலானா
பீர் துல்ஃபிகார் அஹ்மத் நக்ஷ்பந்தி
(தாமத் பரகாத்துஹும்)